# ராம ஜென்ம பூமி

(சமய வரலாற்று ஆராய்ச்சி நூல்)



இராமனும் இராமாயணமும்
ஒரு கற்பனை கதையே
அவைகள் உண்மை சம்பவங்கள்
என்பதற்கு எவ்வித சரித்திர
ஆதாரமும் இல்லை




ஆசிரியர்
உறையூர் வளவன்
(Dr. ஆ. ஆல்பர்ட் ஸ்டீபன். MA,MA,DH, DBC, CJ & MC, PhD.)



பதிப்பாசிரியர்
எஸ். தாயப்பன்

## இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்

ஏறக்குறைய 7 ஆண்டுகளாக பல இடங்களிலிருந்து சேகரித்த சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு வரை அச்சடிக்கப்பட்ட, ஆரோக்கிய உபதேசங்கள் அடங்கிய, கிறிஸ்தவ ஆவிக்குரிய புத்தகங்களை, பல மணி நேரம் கொடுத்து, பல இலட்சங்கள் செலவு செய்து மின் நூல்களாக *(E-Books)* **இலவசமாக (மத்தேயு 10:8)** உங்கள் கரங்களில் கொடுப்பதற்கு, அற்பரும் நீசருமான எங்களை பயன்படுத்தின உன்னத தேவனுக்கே சகல கனமும் மகிமையும் துதியும் உரித்தாவதாக. இதைப் போன்ற இன்னும் ஆயிரக்கணக்கான புத்தகங்களை தரவிறக்கம் *(Download)* செய்ய எங்களுடைய இணையதளத்தை சொடுக்கவும்/பார்க்கவும்: *www.WordOfGod.in*

95 சதவீத புத்தகங்கள் அச்சில் இல்லாதவைகளும், காப்புரிமை முடிந்தவைகளுமே. மீதமுள்ள புத்தகங்கள், நல்ல உபதேசங்களை கொண்டிருப்பதால், முடிந்தவரை ஆசிரியரின் உரிமையோடு மின்-நூலாக, இலவசமாக வெளியிடுகிறோம். ஒருவேளை உங்களுடைய புத்தகம் இப்படி இலவசமாக மின்-நூல் *(E-Book)* வடிவில் வரக்கூடாது என்று நினைத்தீர்களானால், தயவு செய்து எங்களை மன்னித்துக்கொள்ளுங்கள். எங்களுடைய *WhatsApp* எண்ணிற்கோ, மின் அஞ்சலிலோ *(Email)* எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். உடனடியாக எங்களுடைய இணையதளத்திலிருந்து எடுத்துவிடுகிறோம்.

*WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599*

*Email: wordofgod@wordofgod.in*

## *Wishing you in the mighty name of Jesus Christ*

*We had collected several thousands of old Tamil Spiritual Books which are rich in Sound Doctrines across various places of India for 7 years. Some of them are more than 200 years old books. We have spent millions of hours and money in scanning them and coverting them to E-Books. The work is still in progress. These E-books are published completely **free of cost (Matt 10:8)** forever. We give all the praise and glory to God for giving this wonderful opportunity to server Him. You can download thousands of similar Tamil Christian E-books from our website www.WordOfGod.in completely free of cost at any time.*

*95% of these E-Books are not being printed now and their copyrights are already expired. The remaining books are sent as E-Books mostly with the permission from the Authors. If you feel that your books should not be published as E-Book freely, kindly execuse and forgive us. Please let us know the book details by WhatsApp or Email we will remove them from our website.*

*WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599*

*Email: wordofgod@wordofgod.in*

# இராம ஜென்ம பூமி

[சமய வரலாற்று ஆராய்ச்சி நூல்]

ஆசிரியர்

**உறையூர் வளவன்**

(Dr. ஆ.ஆல்பிரட் ஸ்டீபன், M.A., M.A. Th., D.B.C., C.J.& M.C. Ph.D.,)

பதிப்பாசிரியர்

**எஸ்.தாயப்பன்**

[இராமனும், இராமாயணமும் ஒரு கற்பனைக் கதையே.
அவைகள் உண்மை சம்பவங்கள் என்பதற்கு
எவ்வித சரித்திர ஆதாரமும் இல்லை]

நன்கொடை - ரூ.5/-

இராம ஜென்ம பூமி - ஜூன் 2015 - 5,000 பிரதிகள்

## பதிப்பாசிரியரின் பிற நூல்கள்

| | | On circulation | Rs |
|---|---|---|---|
| 1. | என் அழுகையும் ஆனந்தப் புதுவாழ்வும் (தமிழ்) | 3,40,000 | 10/- |
| 2. | என் அழுகையும் ஆனந்தப் புதுவாழ்வும் (கன்னடம்) | 65,000 | 10/- |
| 3. | என் அழுகையும் ஆனந்தப் புதுவாழ்வும் (மலையாளம்) | 40,000 | 10/- |
| 4. | என் அழுகையும் ஆனந்தப் புதுவாழ்வும் (தெலுங்கு) | 10,000 | 10/- |
| 5. | என் அழுகையும் ஆனந்தப் புதுவாழ்வும் (ஹிந்தி) | 15,000 | 10/- |
| 6. | என் அழுகையும் ஆனந்தப் புதுவாழ்வும் (ஒடிசா) | 6,000 | 10/- |
| 7. | My Cry & Joyful Life (English) | 75,000 | 10/- |
| 8. | சித்தர்கள் கண்ட மெய்ப்பொருள் | 1,10,000 | 10/- |
| 9. | பாவத்தின் சம்பளம் நரகம் (தமிழ், கன்னடம்) | 1,20,000 | 10/- |
| 10. | இயேசு கிறிஸ்து உங்களோடு பேசுகிறார் | 50,000 | 10/- |
| 11. | என் ஊழியக்காரனே? | 20,000 | 10/- |
| 12. | இந்தியாவுக்கு இயேசு தேவை, ஏன்? | 40,000 | 10/- |
| 13. | சைவமும் வைணவமும் கிறிஸ்தவமே! | 40,000 | 10/- |
| 14. | நீங்களே எனக்கு சாட்சிகள் | 20,000 | 10/- |
| 15. | உண்மையான கடவுள் யார்? | 25,000 | 10/- |
| 16. | அற்புத சுகமளிக்கும் வைதீஸ்வரர் இயேசு | 20,000 | 10/- |
| 17. | இந்தியாவில் ஏன் சுவிசேஷம் முழுமையாகப் பரவவில்லை? | 15,000 | 10/- |
| 18. | கத்தோலிக்கர்களின் கனிவான கவனத்திற்கு (பாகம் 1) | 15,000 | 10/- |
| 19. | கத்தோலிக்கர்களின் கனிவான கவனத்திற்கு (பாகம் 2) | 15,000 | 10/- |
| 20. | நிறைவேறிய தீர்க்கதரிசனங்கள் (பாகம் 1) | 20,000 | 10/- |
| 21. | நிறைவேறிய தீர்க்கதரிசனங்கள் (பாகம் 2) | 20,000 | 10/- |
| 22. | நிறைவேறிய தீர்க்க தரிசனங்கள் (பாகம் 3) | 5,000 | 10/- |
| 23. | கிறிஸ்துவை எதிர்ப்பதின் விளைவு (தமிழ், கன்னடம்) | 10,000/- | 10/- |
| 24. | திருக்குறள் கூறும் இரட்சிப்பின் நற்செய்தி - டாக்டர் கிறிஸ்டோபர் | 15,000 | 10/- |
| 25. | இந்தியா ஒரு கிறிஸ்தவ நாடு - டாக்டர் சுந்தர் ஏசுவடியான் | 10,000 | 10/- |
| 26. | பாவப்பரிகாரியின் பங்கமில்லா அங்கங்கள் (பாகம் 1) | 5,000 | 10/- |
| 27. | பாவப்பரிகாரியின் பங்கமில்லா அங்கங்கள் (பாகம் 2) | 5,000 | 10/- |
| 28. | பரலோகம் செல்ல எளிதான வழி (சுவிசேஷத்தை அறிவிக்கும் முறை) | 5,000 | 10/- |
| 29. | அரிய வேதம் அறிய வேண்டிய வேதம் | 10,000 | 10/- |
| 30. | இந்திய வேதங்களில் இயேசு கிறிஸ்து (பாகம் 1) | 10,000 | 10/- |
| 31. | இந்திய வேதங்களில் இயேசு கிறிஸ்து (பாகம் 2) | 10,000 | 10/- |
| 32. | விவிலியமும் விஞ்ஞானமும் | 10,000 | 10/- |
| 33. | கிறிஸ்துவத்தைக் குறித்து இந்துக்களின் பொதுவான கேள்வியும், அதற்குரிய பதிலும் (பாகம் 1) | 10,000 | 10/- |
| 34. | கிறிஸ்துவத்தைக் குறித்து இந்துக்களின் பொதுவான கேள்வியும், அதற்குரிய பதிலும் (பாகம் 2) | 10,000 | 10/- |
| 35. | ஜெகோவா விட்னஸின் உபதேசமும் அதற்கு பைபிளின் பதிலும் கேள்வியும் (பாகம் 1) | 5,000 | 10/- |

| | | | |
|---|---|---|---|
| 36. | ஜெகோவா விட்னஸின் உபதேசமும் அதற்கு பைபிளின் பதிலும் கேள்வியும் (பாகம் 2) | 5,000 | 10/- |
| 37. | ஜெகோவா விட்னஸின் உபதேசமும் அதற்கு பைபிளின் பதிலும் கேள்வியும் (பாகம் 3) | 5,000 | 10/- |
| 38. | ஜெகோவா சாட்சிக்கு சத்தியத்தை அறிவிப்பது எப்படி (பாகம் 1) | 5,000 | 10/- |
| 39. | ஜெகோவா சாட்சிக்கு சத்தியத்தை அறிவிப்பது எப்படி (பாகம் 2) | 5,000 | 10/- |
| 40. | சிலை வணக்கம் சின்னாபின்னப்படுத்தியதே | 5,000 | 10/- |
| 41. | கிறிஸ்தவர்களை எதிர்ப்பதின் விளைவு | 5,000 | 10/- |
| 42. | தெய்வீக சுகம் உண்டா?- எபி சுந்தர்ராஜ் | 10,000 | 10/- |
| 43. | கிறிஸ்துவின் இரண்டாம் வருகை- சிஸ்டர் மரியா | 10,000 | 10/- |
| 44. | VCD என் அழுகையும் ஆனந்த புதுவாழ்வும் (தமிழ்) | 3,60,000 | 10/- |
| 45. | VCD என் அழுகையும் ஆனந்த புதுவாழ்வும் (கன்னடம்) | 60,000 | 10/- |
| 46. | VCD என் அழுகையும் ஆனந்த புதுவாழ்வும் (ஹிந்தி) | 30,000 | 10/- |
| 47. | VCD என் அழுகையும் ஆனந்த புதுவாழ்வும் (மலையாளம்) | 10,000 | 10/- |
| 48. | VCD எழுந்து காட்டுவோம் (தமிழ்) | 20,000 | 10/- |
| 49. | VCD முக்திக்கு வழி கிறிஸ்தவமே (தமிழ்) | 15,000 | 10/- |
| 50. | VCD கதாகாலட்சேபம் (தமிழ்) | 20,000 | 10/- |
| 51. | VCD தேசம் சந்திக்கப்படணுமே கர்த்தாவே | 10,000 | 10/- |
| 52. | தமசோம ஜோதிர்கமய | 5,000 | 10/- |
| 53. | வேதமா? விஞ்ஞானமா? - Rev. பால்ராஜ்துரை | 5,000 | 10/- |
| 54. | மனிதனே நீ யார்? - Rev. பால்ராஜ்துரை | 5,000 | 10/- |
| 55. | சீரழிய சினிமா பாருங்கள் - Rev. பால்ராஜ்துரை | 5,000 | 10/- |
| 56. | தெய்வத்தை தேடுவோம் வாருங்கள் - Rev. பால்ராஜ்துரை | 5,000 | 10/- |
| 57. | இந்து மதம் இந்திய மதமா? - உறையூர் வளவன் | 5,000 | 10/- |
| 58. | ஆரோக்கிய வாழ்வுக்கு ஒரு தெய்வீக அழைப்பு | 5,000 | 10/- |
| 59. | இராம ஜென்ம பூமி - உறையூர் வளவன் | 5,000 | 5/- |
| 60. | மதமாற்றமல்ல, மனமாற்றமே தேவை - R. ஸ்டான்லி | 5,000 | 5/- |
| 61. | மனமாற்றத்தை பெருக்குவது எப்படி? - R. ஸ்டான்லி | 5,000 | 5/- |
| 62. | வாழ்க்கையை வளப்படுத்தும் வார்த்தைகள் | 5,000 | 5/- |
| 63. | நாலு வேதங்களின் நாயகர் இயேசு | 10,000 | 5/- |
| 64. | ஓர் அவசர அறைகூவல் | 10,000 | 5/- |
| 65. | கர்நாடகாவிற்காக கதறி அழும் கல்வாரி ஐக்கிய ஜெபக்குழுவும் இராணுவ சகோதரர்களும் (தமிழ், கன்னடம்) | 5,000 | 5/- |
| 66. | திரித்துவம் - பாஸ்டர் சாலமோன் ராஜா | 5,000 | 5/- |
| 67. | இஸ்லாமியர்களின் கேள்விகளுக்குப் பதில்- சாலமோன் ராஜா | | 5/- |
| 68. | இந்திய ஊழிய உயர்வுக்கு ஒரு புதிய பார்வை | 5,000 | 5/- |
| 69. | ஆனந்த புதுவாழ்வு கண்டேன் | 30,000 | 5/- |
| 70. | நித்யஜீவன் தரும் நிகரில்லா இயேசு | | 5/- |
| 71. | இது உங்கள் உயிர் காக்கும் முயற்சி - சாந்திதேவி | 10,000 | 2.50 |
| 72. | மோட்ச வாழ்வுக்கு வழி- சாந்திதேவி | 5,000 | 2.50 |
| 73. | DVD ஆனந்த புதுவாழ்வு (Telefilm) | 2,000 | 100 |
| 74. | DVD அமாவாசை (Telefilm) | 2,000 | 100 |

இந்த நூல்கள் மற்றும் விசிடி கிடைக்கும் முகவரி
**எஸ்.தாயப்பன்**
22, ஜி.டி.நாயுடு தெரு, பாலாஜி அவென்யூ-1,
சேலையூர் போஸ்ட், சென்னை - 600 073.
தொலைபேசி: 044 - 22294056, மின்னஞ்சல்: sakthiprabha@yahoo.com

**நூலை அனுப்ப சில விதிகள்:**

ஒவ்வொரு நூலுக்கும், விசிடிக்கும் நன்கொடை ரூ.10/- + தபால் செலவு ரூ.1. M.O., D.D அனுப்பி பெற்றுக் கொள்ளலாம். உங்கள் முகவரியை MO பாரத்தின் அடியில் உள்ள தகவல் பகுதியில் தெளிவாக, பின்கோடு நம்பருடன் எழுதி அனுப்புங்கள். உங்கள் தொலைபேசி, செல்போன் எண்களை கண்டிப்பாக எழுதவும். செக் பெற்றுக் கொள்ளப்பட மாட்டாது. MO, DD பெற்றுக் கொண்ட பிறகே நூல்கள் அனுப்பி வைக்கப்படும்.

**விசிடி அனுப்ப தபால் செலவு மட்டும்: கொரியரில் அனுப்ப (தமிழ்நாட்டிற்குள்)**

1 முதல் 15 விசிடி அனுப்ப ரூ.50/-. 16 முதல் 25 விசிடி அனுப்ப ரூ.60/-

100 விசிடிக்கு மேல் மற்றும் அதிக புத்தகம் வேண்டுமானால், அவைகள் கே.பி.என். பார்சல் சர்வீஸ் மூலம் வெளியூர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

## 'வாழ்க்கையை வளப்படுத்தும் வார்த்தைகள்'

கர்த்தர் இந்த அடிமையைக் கொண்டு ஆசிரியராகவும், பதிப்பாசிரியராகவும் வெளியிட்ட புத்தகங்கள், விசிடி மற்றும் டிவிடிக்கள் ஒவ்வொன்றிலும் எதைக் குறித்து எழுதப்பட்டிருக்கிறது என்பதை வாசகர்கள் அறிந்து, தேவையான புத்தகம், சீடிக்களைக் கேட்டுப் பெற்றுக் கொள்வதற்கு எதுவாக, "வாழ்க்கையை வளப்படுத்தும் வார்த்தைகள்" என்னும் ஒரு நூலும் வெளியிட்டு இருக்கிறேன். ஆண்டவருடைய வருகைக்கு நீங்கள் ஆயத்தமாக, மற்றவர்களையும் ஆயத்தப்படுத்த, ஆதாயப்படுத்த ஆவிக்குரிய புத்தகங்களை தேர்வு செய்ய இந்த நூல் உங்களுக்கு உதவும்.

**- எஸ். தாயப்பன்**

**நன்கொடை - ரூ.5/-**

# ஆசிரியர் குறித்து

ஆசிரியர் திரு.ஆ.ஆல்பிரட் ஸ்டீபன் என்கிற உறையூர் வளவன் நெல்லை மாவட்டம் சாத்தாங்குளம் ஸ்டீபன் தம்பான் குடும்பத்தைச் சேர்ந்தவர். பட்டுக்கோட்டையில் பள்ளிப் படிப்பை முடித்து, மதுரை அமெரிக்கன் கல்லூரியில் பொருளாதாரம் பயின்று, சென்னை பல்கலைக் கழகத்தில் வரலாற்றில் முதுகலைப் பட்டம் பெற்றவர். மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் இதழியல் மற்றும் மக்கள் தொடர்பு பயின்றவர். 1965 முதல் 'உறையூர் வளவன்' என்கிற பெயரில் இவர் எழுதிய பல பொது அறிவு நூல்களும், கதைகளும், கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. இவரின் 'இந்துமதம் இந்திய மதமா?' என்கிற சமய வரலாற்று ஆராய்ச்சி நூல் ஓர் புரட்சிப் படைப்பாகும். இவரின் 'திருமறை காட்டும் அறிவியல் உண்மைகள்' என்ற நூலில் பல புதிய அறிவியல் செய்திகளை திருமறையிலிருந்து வெளியிட்டுள்ளார்.

தமிழ்நாடு சுவிசேஷ சமூக நல மையம் என்ற ஒரு ஊழிய நிறுவனத்தை திருக்கோவிலூரில் ஏற்படுத்தி நண்பர்களுடன் இணைந்து இறைப்பணி செய்து வருகிறார்.

இவரைத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**உறையூர் வளவன்**
'அருள் தோட்டம்'
13-சி, ஆசனூர் சாலை
திருக்கோவிலூர் - 605 757
கைபேசி எண்: 9486789191.

# முன்னுரை

சகோதரர் உறையூர் வளவன் என்கிற ஆல்பிரட் ஸ்டீபனோடு எனக்கு பல வருஷங்களுக்கு முன்பு பரிச்சயமும், தொடர்பும் ஏற்பட்டது. என்னுடைய சில புத்தகங்களைப் படித்து விட்டு மனதார பாராட்டி கடிதம் எழுதியதோடு அவர் எழுதிய சில புத்தகங்களையும் எனக்கு அனுப்பி வைத்தார். அதில் 'இராம ஜென்ம பூமியும்', 'இந்து மதம் - இந்திய மதமா?' என்கிற இரண்டு சமய வரலாற்று ஆராய்ச்சி நூல்களும் ஆகும். பல ஆராய்ச்சியாளர்களின் ஆய்வறிக்கைகளை எல்லாம் கற்றுத் தேர்ந்து அவைகளை மிகத் தெளிவாக, எளிய நடையில் மிக அருமையாக எடுத்து எழுதியிருந்தார். பின் என்னுடைய ஊழிய ஓட்டத்தில் அவரோடு ஒரு தொடர்பு இல்லாமல் போய்விட்டது.

பல ஆண்டுகள் அமைதியாக இருந்த இந்துத்துவா சகோதரர்கள் இப்போது கர்வாப்சி, மதமாற்றம், இராமர் கோயிலைக் கட்டியே தீருவோம் என்று தற்போதுள்ள மத்திய ஆட்சியின் ஆதரவில், அரவணைப்பில், தைரியத்தில் துள்ளிக் குதித்து அறிக்கை விடுவதோடு மட்டுமின்றி நம் தேசத்தின் அரசியல் அமைப்புச் சட்டம் உறுதியளிக்கின்ற மதச்சார்பின்மை, மத சுதந்திரம், மத நல்லிணக் கத்திற்கு பங்கம் வரும்படி பல விரும்பத்தகாத செயல்களிலும் ஈடுபட்டு வருகின்றனர். தேச நலனில், ஒற்றுமையில் அக்கறையுள்ள எந்த குடிமகனும் வருந்தத்தக்க, கவலைக்குள்ளாக்கும் நிகழ்ச்சிகள் நடந்து வருகின்றன. அப்போது சகோதரர் உறையூர் வளவன் எழுதி முன்பு அனுப்பி இருந்த மேற்கண்ட இரு புத்தகங்களும் நினைவுக்கு வந்தன. அவைகளை தேடிக் கண்டுபிடித்து மீண்டும் ஒரு முறை ஆற அமரப் படித்தேன். இன்றைய சூழ்நிலைக்கு தற்போது மிகவும் தேவையாக, மிக அத்தியாவசியமாக அனைவரும் படிக்க வேண்டிய புத்தகம் என்று தேவன் எனக்கு உணர்த்தினார். உடனடியாக அவருக்கு கடிதம் எழுதினேன். மறுபதிப்புச் செய்ய மனமுவந்து அனுமதி தந்தார்.

விருப்பு வெறுப்பு இன்றி திறந்த மனதோடு இந்த இரண்டு சமய ஆராய்ச்சி நூல்களையும் படியுங்கள். தேசத்தின் அமைதி, ஒற்றுமை, முன்னேற்றத்திற்காகவும், அதை அறிந்தோ அறியாமலோ மதவெறி கொண்டு குலைக்க நினைக்கும் இந்துத்துவா அமைப்பினரும் மனம் திரும்ப வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனாகிய இயேசுவிடம் ஜெபிப்போம்.

தேச அமைதி, ஒற்றுமையை விரும்பும்
உங்கள் சகோதரன்
**எஸ்.தாயப்பன்**

சென்னை-73
01.07.2015

# 1. இராம ஜன்ம பூமி

வரலாறு என்ற சொல் ஆங்கிலத்தில் 'ஹிஸ்டரி' (History) என்பதாகும். ஹிஸ்டரி என்ற சொல் ஹிஸ்டறி (Historie) என்ற கிரேக்க சொல்லிலிருந்து பிறந்ததாகும்.

ஆக்ஸ்போர்டு அகராதியில் வரலாறு என்பதற்கு 'பொது நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியான, முறையான பதிவேடு' என்று பொருள் கூறப்பட்டுள்ளது. ஆதியில் வரலாறு என்ற சொல் ஒன்றைப் பற்றிய அறிவு என்ற பொருள்பட இருந்தது. பின்னர் நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியான முறையான பதிவேடு என்னும் பொருட்பட வழங்கப்பட்டது.

ஒரு சமய இலக்கியத்தை வரலாற்றுக் கண்கொண்டு பார்ப்பது கடினமே. அவ்வகையில் கிறிஸ்தவ திருமறை மட்டுமே முழுமை பெறுகிறது. கற்பனைக் கதைகள், புராணக் கதைகள், புனைந்துரைகள் வரலாற்றிலிருந்து வேறுபடு கின்றன. சமய இலக்கியங்கள் புராணங்களாகவே இருக் கின்றன. புராணங்கள் என்றாலே கட்டுக் கதைகள் என்றே பொருள்படும். ஆனால் எல்லா புராணங்களிலும் ஒரு வரலாற்று மையம் உண்டு.

புதினம், நாவல் என்பது ஒரு கட்டுக்கதையாக இருப்பினும் ஒரு ஆசிரியர் தான் கண்ட, கேட்ட அல்லது தன் வாழ்க்கை யோடு இணைந்த ஒரு நிகழ்ச்சியை மையமாகக் கொண்டு எழுதுவதைப் போல, அன்றைய புராணங்கள் செவி வழிச் செய்தியாக வந்த வரலாற்று உண்மைகளை தங்கள் இடத்திற்கும், பண்பாட்டிற்கும் ஏற்ப எழுதி வைத்தனர் என்ற உண்மையை ஆராய்வதில் நான் ஓரளவு வெற்றி பெற்றேன் என்பதை நான் எழுதிய 'இந்து மதம் இந்திய மதமா?' என்ற சமய வரலாற்று ஆராய்ச்சி நூலைப் படித்து எழுதும் வாசகர்களின் கடிதங்களிலிருந்து நம்புகிறேன்.

சமய இலக்கியங்கள் 'கதை பொதிந்த உண்மைகளாக' (Myths), புராணக் கதைகளாக (Legends) நமக்கு கிடைக்கின்றன. இராமாயணமும் இதன் அடிப்படையில் பிறந்ததே. மேலை நாட்டு சமய இலக்கியங்கள் அறிவியல் சிந்தனையோடு விளக்கப்படுகின்றன. ஆனால் இந்தியா போன்ற நாடுகள் இதில் வேறுபடுகின்றன. சிந்தனையற்ற விளக்கத்தை ஆன்மீகம் என்ற அடிப்படையில் விளக்கி மக்களின் சிந்தனைக்கு தடை செய்கின்றனர்.

இராமனைப் பற்றி கூறும் இராமாயணம் சமஸ்கிருத மொழியில் புராண காலத்தில் அதாவது சுமார் கி.மு. 900 - 600ல் எழுதப்பட்டதாகும். இந்தக் காலத்தில் இந்தியாவின் வரலாறு எவ்விதம் இருந்தது என்பதை நாம் முதலில் அறிய முற்பட வேண்டும்.

# 2. இந்தியாவும் மத்திய ஆசிய நாடுகளும்

பண்டைய நாட்களில் இந்தியா சிந்து தேசம் என்ற பெயரில் அறியப்பட்டது. கிறிஸ்தவ திருமறையில் **'இந்து தேசம் முதல் எத்தியோப்பியா தேசம் வரைக்குமுள்ள நூற்றியிருபத்தேழு நாடுகளையும் அரசாண்ட அகாஸ்வேருவின் நாட்களிலே சம்பவித்தது'** (எஸ்தர் 1:1) என்று எழுதப்பட்டுள்ளது. மத்திய ஆசிய நாடுகளுக்கும் இந்தியாவிற்கும் பல வகையில் தொடர்புகள் இருந்தன என்பதை வரலாற்று சான்றுகள் நமக்கு புலப்படுத்துகின்றன. மத்திய ஆசிய மன்னர்கள் இந்தியாவின் வட பகுதியில் ஆண்டிருக்கின்றனர். தென் இந்தியா வரை வணிகத் தொடர்பு இருந்துள்ளது. மத்திய ஆசியாவில் அடிமைகளாக இருந்த பல கோத்திர மக்கள் இந்தியாவில் தஞ்சமாக பண்டைக் காலத்திலே வந்திருக்கின்றனர்.

இன்றைய இந்திய பண்பாடு பலவும் மத்திய ஆசிய நாட்டு மக்களின் பண்பாட்டு பிரதிபலிப்பேயாகும் என்பதை வரலாற்று ஆராய்ச்சியாளர் எவரும் மறுக்க முடியாது.

இந்தியாவின் புனித நதியாக கருதப்படும் கங்கை நதிக்கு 'கங்கை' என்ற பெயரைச் சூட்டியவர்கள் கிரேக்கர்களே. சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன்பு இது 'பைசோன்' (Phison) என்று அழைக்கப்பட்டதாக அறிகிறோம்.

யூத மக்களின் பழங்கால நடவடிக்கைகளைப் பற்றி எழுதும்போது,

***"And Phison, which denotes a multitude, running into India, makes its exit into sea, and is by the Greeks called "Ganges"* - Antiquities of the Jews' page 25.**

**'தோட்டத்திற்கு தண்ணீர் பாயும்படி ஏதேனிலிருந்து ஒரு நதி ஓடி, அங்கேயிருந்து பிரிந்து நாலு பெரிய ஆறுகளாயிற்று. முதலாம்**

**ஆற்றுக்குப் பைசோன் என்று பேர். அது ஆவிலா தேசம் முழுவதையும் சுற்றி ஓடும்; அவ்விடத்திலே பொன் விளையும்."** - ஆதியாகமம் 2:10

அக்காலத்தில் வட இந்தியப் பகுதி ஆவிலா தேசம் என்ற பெயரில் வழங்கப்பட்டு வந்துள்ளது என்பதும் பண்டைக் கால முதல் மத்திய ஆசிய மக்கள் பல வகையிலும் இதோடு தொடர்பு கொண்டிருந்தனர் என்பதும் நன்கு அறிய முடிகிறது. மேலும் **"அவர்கள் ஆவிலா துவங்கி எகிப்துக்கு எதிராக அசீரியாவுக்குப் போகிற வழியிலிருந்து சூர் மட்டும் வாசம் பண்ணினார்கள்"** - (ஆதியாகமம் 25:18) இதன் மூலம் ஆபிரகாமின் மகனான இஸ்மவேலின் சந்ததியார் வட இந்தியாவில் கங்கை நதிப் பகுதியில் வாழ்ந்தனர் என்று காண்கிறோம்.

இதனால் இவர்கள் பின்பற்றிய சுமேரிய நாகரீகத்திற்கும் சிந்துவெளி நாகரீகத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை அறியலாம்.

'இந்திய வரலாற்றுப் பாடம்' என்ற நூலில் வரலாற்று ஆசிரியர் திரு.ராவ் இவ்வாறு எழுதுகிறார்:

*"Long before the coming of Aryans, the community of India was mostly composed of Dravidians. The Dravidians had their own alphabet. Some Historians are of the opinion that they were the descendants of the primitive inhabitants of India and opines that they were related to Sumerians.'* - **Rau's "Studies of Indian History'.**

இவருடைய கருத்தை உறுதி செய்யும் வகையில் பல்வேறு வரலாற்று சான்றுகள், பண்பாட்டு சான்றுகள், சமயச் சான்றுகள் உண்டு. வரலாற்றை மறந்து, திராவிடர்கள் இந்தியர்களே என்று தங்கள் இனப் பற்றின் காரணமாக நாம் நிலை நாட்ட விரும்புகிறோம். இதனை விரிவாய் எழுதின் தனி ஆய்வு நூலாகி விடும். சில ஒற்றுமைகளை மட்டும் பின்னர் பார்க்கலாம்.

சிந்துவெளி நாகரீகத்திற்கும், சுமேரிய நாகரீகத்திற்கும் கலை, கட்டிட அமைப்பு போன்ற பல அம்சங்களில் பல நெருங்கிய தொடர்பு உண்டு என்பதைப் பல எடுத்துக் காட்டுகளுடன் விளக்க முடியும். ஆனால் இராமனுடைய கதைக்கும் மத்திய ஆசிய வரலாற்றிற்கும் இடையே உள்ள தொடர்பை மட்டும் காண்போம்.

சுமேரியர்கள் அசீரியா நாட்டு பழங்குடி மக்களாகும். அசீரியா என்ற பெயர் 'அசூர்' என்ற அவர்களின் கடவுள் பெயரிலிருந்து வந்தது என்பது வரலாற்று ஆசிரியர்கள் கருத்தாகும். 'அசூர்' என்ற சொல்லும் 'சஷோர்' என்ற சொல்லும் சேர்ந்து 'அசீரியா' என மருவியது என்று கூறப்படுகிறது.

அசீரியா என்ற சொல்லுக்கு 'தண்ணீர் எல்லை' (Water bound-ary) என்றும் 'அருள் கூடியது' (gracious) என்று பொருள்படும்.

வடமொழியில் எழுதப்பட்ட 'அசூர்' வேதத்திற்கும் இதற்கும் தொடர்பு உண்டு என்று கருதலாம்.

இஸ்ரவேலரின் வரலாறு (முதலாம் பாகம்) என்ற நூலில் அதன் ஆசிரியர் திரு. இரா. எட்வர்ட்சாம் செமித்திய இனத்தைச் சேர்ந்த அக்கேடியர்கள் (Akkadians) நாடோடிகளாக குடியேறி பின்னர் அந்தப் பேரரசு கி.மு. 2300-க்கும் 2180 -க்கும் இடைப்பட்ட காலத்தில் சிந்து பள்ளத்தாக்கு வரை வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்ததாக எழுதுகிறார்.

''அக்காலப் பேரரசு கி.மு. 2380 முதல் 2180 வரை நிலை பெற்றிருந்தது. இவர்களின் முக்கிய மன்னனான சார்கன் என்பவன் உலக வரலாற்றிலேயே முதற் பேரரசை நிறுவினவன் என்று கூறப்படுகிறது. இவன் முதலில் கிஷ் (Kish) என்ற இடத்திலும் பின்னர் அக்கேடியாவிலும் ஆளுகை செலுத்தினான். அவனுக்குப் பின்பு அவனது இரு மகன்கள் ஆட்சி செய்த பின்பு அன்னாரின் பேரனான நரம்சின் (Naramsin) பாட்டனாரைப் போலவே பல நாடுகளையும் தன் குடையின் கீழ் கொண்டு வந்து, பேரரசை ஆளுகை செய்தான். நூசி (Nuzi), நினிவே, சாகர் - பசார் (Chagar - Bazar), டெல் - இப்ராக் (Tel - Ibrak) முதலிய இடங்களில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் ஏடுகள் இதற்கு சான்றாகும். இவன் சின்ன ஆசியா வரை படையெடுத்தது மன்றி சிந்து பள்ளத்தாக்கு வரையிலும், வர்த்தகத் தொடர்புகள் வைத்திருந்தான்'' - (பக்கம் 24- இஸ்ரவேலரின் வரலாறு (முதல் பாகம்) இரா. எட்வர்ட்சாம்.)

இந்திய சமயம், வழிபாடு இவைகள் மத்திய ஆசிய மக்களின் வழி வந்தவைகள் என்பதை பலரும் ஏற்றுக் கொண்ட

என்றாலும் சமய வாதிகள் தங்கள் ஆன்மீகப் பற்றால், வெறியால் இந்தியாவில் தங்கள் வளர்ச்சிக்காக பிரச்சினையை உருவாக்கி வருகின்றனர். சமய வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் என்ற முறையிலே உண்மையை மக்களுக்குத் தெளிவுபடுத்துவது நமது கடமையாகிறது.

டாக்டர் எஸ்.இராதாகிருஷ்ணன் இந்திய சமயத்தைப் பற்றி எழுதும் போது திராவிட - ஆரிய பண்பாட்டின் போரினையும் அதன் விளைவான செல்வாக்கையும், தாக்கத்தையும் குறித்து தமது "Hindu view of life' என்ற நூலில் இவ்வாறு எழுதுகிறார்.

***The Vedic culture which resembles that of the Homeric Greeks or the cellic at the beginning of the christian era, or that of the pre - christian Teutans and Slaves becomes transformed in the epics with Hindu culture through the influence of Dravidians.*** - Hindu View of Life - Dr.S. Radhakrishnan

வரலாற்று சமய ஆய்வாளரான சர். சார்லஸ் எலியட் என்பவர் தன் கருத்தை தெரிவிக்கும்போது -

***"We might see that it would be more correct to describe Indian religion as Dravidian religion stimulated and modified by the ideas of Aryan invaders. For the great deities in Hinduism Siva, Krishna, Rama, Durga and some of its most essential dosctrines such as metenpsychosis and divine incarnations are totally unknown of the Veda or obscurely adumbrated in it. The chief characteristics of mature Indian religion are charateristics of an area not of race, and they are not the characteristics of religion Persia, Greece or the Aryan Lands.'*** Sri Charles Elliot - Hindusim and Buddism, P. xv

என்று எழுதுகிறார். ஒவ்வொரு இந்திய கடவுளுக்கும் மேனாட்டு வரலாற்றுக்கும் ஒரு தொடர்பு உண்டு என்பதை மறுக்க முடியாது.

நான் எழுதிய 'இந்து மதம் இந்திய மதமா?' என்ற நூலில், பிரமன், நாராயணன், முருகன், கணபதி, சக்தி, ஐயப்பன் மற்றும் சிவன், சிவலிங்கம், சூலாயுதம், திருநீறு, குங்குமம் இவை களுக்கும் மத்திய ஆசிய மக்களின் வழிபாட்டிற்கும் உள்ள தொடர்பினை விளக்கியுள்ளேன்.

இக்கருத்தை உறுதிப்படுத்தும் பலருடைய கருத்துக் களையும் இங்கு காண்போம்.

''ஈரான் தேச பாகங்களில் இருந்து இந்தியாவிற்குள் குடியேறின ஆரியர்கள் என்போர் இன்டஸ் நதியின் வளப்பத் தைக் கண்டு அதிசயித்து அதை உச்சரிக்கத் தெரியாமல் 'சிந்துஸ்' என்றனர். கி.மு. 522ம் ஆண்டு தரியு என்ற பெர்சிய மன்னன் இந்த இன்டஸ் நதியின் பாகங்களையொட்டிய பிரதேசங்களைத் தன்னுடைய ஆளுகையின் கீழ் கொண்டு வந்தான். அவர்கள் சிந்து என்பதை உச்சரிக்கத் தெரியாமல் 'இந்துஸ்' என்றனர். கிரேக்கர்கள் இதையே பிற்காலத்தில் இன்டஸ் என்பதை இண்டியா என்றனர். இஸ்லாமியரின் ஆளுகையின் கீழ் இந்தியா இருந்தபோது பெர்சியர் வைத்த பெயரையொட்டி ஹிந்துஸ்தானத்தில் வாழ்ந்தவர்கள் ஹிந்துக்கள் என்றழைக்கப்பட்டனர். இன்றைக்கு கருதப் படுவது போல் பூர்வ காலங்களில் இந்து என்பது ஒரு மதத்தின் பெயராக கருதப்படவில்லை. ஹிந்து என்றால் இந்தியன் என்றே பொருள்படும்.' - Page 225, Manorama Year Book 75

''நாம் வசிக்கும் நாடு, இந்திய நாடு, இதற்கு 'இந்தியா' என்ற பெயர் வந்த கதையே விநோதமானது. வடமேற்கிலிருந்து வந்தவர்கள், சிந்து நதிக் கரைக்கு கிழக்கே வாழ்கிற மக்களுக்கு எல்லாம் 'சிந்துக்கள்' என்று பெயரிட்டார்கள். நாளடைவில் இது ஹிந்து என்றாயிற்று. மதம் 'ஹிந்து' மதம் ஆயிற்று. இவர்கள் வாழ்ந்த நாடு 'இந்திய நாடு'. இப்படியாக இப்பெயர்கள் எல்லாம் அன்னியர் வைத்த பெயர்களே. - மு.அருணாசலம், சைவ சமயம், பாரி நிலையம், 1969, பக்கம் 12

'இந்து மதம் என்பது என்றுமே ஒரு தனி மதமாக இருந்த தில்லை என்பதை காண்கிறோம். இதனால் இன்றைய இந்து தெய்வங்களும் இந்துக்களுக்கே உரியதாக இருந்ததில்லை என்பதை எளிதில் அறியலாம்.' - திரு. D.S. சர்மா "Hinduism is more a league of Religions than a single religion with a definite creed.' - (What is Hinduism by D.S. Sharma - P.10) என்கிறார்.

இதைப்பற்றி கூறும் திரு. S.K.சட்டர்ஜி,

***"It is not at all a single religion with a creed by which everybody must subscribe. It is rather a federation of different kinds of approach to the reality that is behind the life'*** (Cultural Heritage of India Vol IV, S.K. Chatterji) என்கிறார்.

இந்து மதத்தின் அடிப்படை வேதங்களைப் பார்க்கும் போதும் கூட அதன் மையக் கருத்துகள் மத்திய ஆசிய, கிரேக்க, ரோம் நாட்டு புராணங்களுக்கும் வழிபாட்டு முறைகளுக்கும் நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதைக் காண்கிறோம்.

**"வடமேற்கு திசையிலிருந்து கி.மு. 1500 அல்லது அதற்கு முன் இந்தியாவின் மேல் படையெடுத்த ஆரியர்கள் இந்து நாகரீகம் அழிவதற்கும், புதிய மதக் கருதத்துகள் புகுவதற்கும் காரணமாக இருந்தார்கள்"** - Source of Indian Traditino' page 4. இவர் கூறும் இந்து நாகரீகம் என்பது திராவிடர் நாகரீகம் போலும், எல்லாருடைய கருத்துகளும் ஆதியில் இந்தியாவிற்குள் வந்தவர்களே புதிய சமய முறையை, இந்தியாவில் புகுத்தனர் என்பதில் ஒன்றாகவே உள்ளது. வரலாற்று காலங்கள் இதனை உறுதி செய்கின்றன.

கி.மு. 2700 - 1700 சிந்துவெளி நாகரீகம்

கி.மு. 1500 - 1200 ஆரியர் படையெடுப்பு.

கி.மு. 1200 - 600 புராண காலம்.

கி.மு. 600-க்குப் பின் உபநிஷத்துக்களின் காலம்.

நான் முன்பே எழுதியதைப்போல் இன்றைய இந்து கடவுள்கள் எல்லாருமே புராணத்தால் கிரேக்க, ரோம், எகிப்திய கடவுள்களுடன் நெருங்கிய தொடர்புடையவர்கள். உதாரண மாக ரோம் நாட்டு மதுதேவன் பேச்சுக்கும் ஸ்கந்தனுக்கும் பிறப்பில் ஒற்றுமையை காண்கிறோம். (இந்து மதம் இந்திய மதமா? நூலில் காண்க) கிரேக்க, ரோம நாட்டு புராணங்கள் காலத்தில் முற்பட்டவை. மற்றும் மத்திய ஆசிய மக்கள் ஆரியர்களாக இந்தியாவிற்கு வந்து நமது புராணங் களைப் படைத்தனர். ஆகையால் அந்த நாட்டுப் புராணங்களே நமது நாட்டுப் புராணங்களின் அடிப்படையென்பதை மறுக்க முடியாது.

இதற்கு எடுத்துக்காட்டாக சக்தி வழிபாட்டின் வழியைக் காணலாம். சக்தி யார் என்ற தலைப்பின் கீழ் 'இந்துமதம் இந்திய மதமா?' என்ற நூலில் வெளி வந்ததை இங்கு தருகிறேன்.

**இந்திய நாட்டின் சக்தி**

தாய் தெய்வ வழிபாடு உலகின் பல பாகங்களில் தொன்றுதொட்டு இருந்து வருவதைக் காணலாம். மத்திய ஆசிய நாடுகளான சுமேரியா, எகிப்து, அசிரியா, பாபிலோன் போன்ற நாடுகளில் பல பெண் தெய்வங்கள் கன்னி தெய்வங்களாகவும், செழிப்பைக் குறிக்கும் தெய்வங்களாகவும், காவல் தெய்வமாகவும் வணங்கப்பட்டு வந்துள்ளன.

இந்திய நாட்டில் சக்தி, துர்க்கை வழிபாடு குறித்து ஆராய் வதற்கு முன் உலகமெங்குமுள்ள தாய் தெய்வ வழிபாட்டை சிறிது காண்பது முக்கியமாகும். ஆரியர் வருகைக்குப் பின் பிரபலமான சக்தி வழிபாடு மத்திய ஆசியாவிலிருந்து வந்தது என்று நிரூபிப்பது எளிதாகும். ஆனால் தமிழகத்திலுள்ள கொற்றவை வழிபாடும், மேனாட்டிலிருந்து வந்துள்ளது என்பதை நிரூபிக்க பல தடயங்கள் நமக்குக் கிடைக்கின்றன.

சுமேரிய நாகரீகமான, மொஸப்படோமியாவில் கண்டெடுக் கப்பட்ட புதை பொருள் தடயங்களும் சிந்து நாகரீகமான மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரீக தடயங்களும் ஒரே மாதிரி இருப்பதையும் அந்த இரு நாடுகளுக்கும் வரலாற்றுக்கு முன்பிருந்தே தொடர்புகள் இருந்துள்ளதையும் முன்பே கண்டோம். சிந்து சமவெளி நாகரீக அகழ்வாராய்ச்சி தடயங்கள் அங்கு பெண் தெய்வ வழிபாடு இருந்துள்ளதைக் காட்டு கின்றன. பாபிலோனிய நாகரீகங்களில் காணப்படும் இஸ்தார் என்ற பெண் தெய்வ கோயிலில் காணப்படும் பெரும் குளமும், தேவதாசிகள் முறையும், இந்து மத வழிபாட்டின் அடிப்படை யாக இருக்கக் கூடும் என்று பல அறிஞர்கள் கருதுகின்றனர்.

பழந்தமிழ் இலக்கியங்களில் தாய் தெய்வ வழிபாட்டைக் காண்கிறோம். திராவிடத்தின் ஆதி மக்கள் என கருதப்படும் ஆஸ்ட்ரிக் (Austric) பழங்குடி மக்களின் தாய் தெய்வ வழிபாட்டையும் தமிழ் இலக்கியங்களில் காண முடிகிறது.

ஆதியில் உலகப் படைப்பின் சின்னமாகவும் எல்லோரையும் பெற்றெடுத்ததைக் குறிக்கும் வகையிலும் உலகமெங்கும் தாய் தெய்வ வழிபாடு இருந்துள்ளது. உலகெங்கும் கிடைக்கப் பெற்ற பெண் தெய்வங்களின் உருவங்கள் பிறப்பின் முறையை குறிப்பிடும் வகையில் பெரிய வயிற்றுடனும் பெரிய மார்புகளையுடையதாகவும் இருக்கின்றன.

தமிழ் நூல்களில் காளி என்றும் கொற்றவை 'போக மார்மோடி' என்றும் 'மோடேத்தரிகை' என்றும் அழைக்கப் படுவதை காண்கிறோம். மோடி என்ற சொல் காளியை குறிக்கும் சொல்லாக உள்ளது.

மோடு என்ற தமிழ் சொல் வயிறு எனப் பொருள்படும். பெரிய வயிற்றினை உடையவள் என்ற காரணப் பெயரில் மோடி என்ற சொல் காளியைக் குறிக்கிறது. ஆதி மக்கள் பிறப்பிற்கு வயிறும் மார்பும் முக்கியமானது என்ற காரணத்தால் உலக மக்களைப் படைப்பித்த பெண் பெரிய வயிறும் மார்புகளையும் உடையவளாக இருத்தல் வேண்டும் என்ற கற்பனையில் உருவங்களைப் படைத்துள்ளனர்.

இன்று அழகிய உருவைக் கொண்ட 'வீனஸ்' என்ற பெண் தெய்வம் பழங்கால சிற்பங்களில் பெரிய வயிற்றை உடைய வளாகவும் மார்புகளை உடையவளாகவும் காணப்படுவதைக் காண்கிறோம்.

வரலாற்றுக் கண் கொண்டு பார்க்கும் போது ஆரியர்கள் ஆண் தெய்வங்களுக்கே முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர். ஆரிய காலத்திற்குப் பின்னர் இரண்டும் கலந்துள்ளது என்பதையும் அறியலாம்.

இதுகுறித்து எழுதும் ஆசிரியர் திரு. பால்கன் தனது 'இந்து மதக் கடவுள்கள்' என்ற கட்டுரையில்,

**"Early Tamil writers call the mother goddess Kortavai and Aiyai. The South Indian villagers worship a number of "mothers' or 'gramadavatas', all over India, the non - Aryan masses have always worshipped female deites. A slow process of Brahmanic syncretism and integration has brought about a gradual**

'aryanisation' of these mother cults, the female daitees being united with various gods as their consorts and manifestations of their power (Sakti)' - (Religious Hinduism - page no. 88) என்று குறிப்பிடுகிறார்.

பிறப்பின் தெய்வமாகத் தோன்றிய தாய் தெய்வ வழிபாடு கடற்கரையோரங்களில் மக்களால் கடல் கன்னியாகவும் காடுகளில் கானக தெய்வமாகவும் வழிபாட்டிற்கு மாறினாள். பல தமிழ் இலக்கியங்களில் 'காடுறை தெய்வம்' என்றும் 'கானமர் செல்வி' என்றும் கான துர்க்கை என்றும் அழைக்கப் படுகிறாள்.

மதுரை மீனாட்சி என்று அழைக்கப்படும் பெண் தெய்வம் பண்டைக்கால மதுரை மாநகரிலுள்ள கடம்பவனம் என்ற இடத்தில் கோயில் கொண்டிருந்த கானமர் செல்வியே என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். பிற்கால புராணங்களில் சிவனுக்கு உறவு கற்பித்து, மீனாட்சியின் செழிப்பை மட்டுப் படுத்தி மூன்று மார்புகளையுடையவளாக நம் புராண புரட்டர்கள் காட்டுகின்றனர்.

காட்டில் வாழும் இந்த தாய் தெய்வத்திற்கு நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளதை இலக்கியங்களில் காண முடிகிறது. இவைகள் பேய் வழிபாட்டின் தோன்றலாகவுள்ளது. காளிக்கு கான நாடியம்மன் என்ற பெயரும், நாடியம்மன் என்ற பெயரும் இதன்பால் ஏற்பட்டதே. சிலப்பதிகாரம், மணி மேகலை போன்ற பழம் தமிழ் நூல்களில் நரபலியிட்டு கான துர்க்கையை வழிபடும் வழக்கத்தை பல இடங்களில் காண்கிறோம்.

மொகஞ்சதாரோவில் காணப்பட்ட சிற்பத்தில் ஒரு பெண் தெய்வத்திற்கு நரபலியிடுவதைப் போல் சித்தரிக்கப் பட்டுள்ளது என்று பேராசிரியர் ஜான் மார்ஷல் கூறியுள்ளார். வடமொழியில் கொட்டலி என்று அழைக்கப்பட்ட பெண் தெய்வமே திராவிடத்தில் கொற்றவை என்று அழைக்கப் படுவதை அறியலாம்.

வடநாட்டில் காளி, தாரா, புவனேஸ்வரி, பைரவி, தூமாவதி, மாதங்கி, கமலா, ஹிலானி, பவானி; கௌரி, சியாமளா, மாயா,

ரேணுகா, சாரதா, அன்னபூரணி, லலிதா, மீனாட்சி என்ற பெயர்களில் கொற்றவை அழைக்கப்படுகிறாள்.

மிகப் பழம்பெரும் தெய்வமான கொற்றவையை பிற்காலத்தில் சிவபுராணத்தில் பார்வதியாக ஆரியர்கள் மாற்றிப் படைத்தனர்.

புராணங்களில் கற்பனைப் படைப்பாக பெண் தெய்வ வழிபாடு பல கதைகளிலும் பல பெயர்களிலும் காணப்படுகிறது. அவைகள் எந்த வகையிலும் நமக்கு ஆராய்ச்சிக்கு உதவாது.

வரலாற்றுச் சான்றுகளுடன் நமக்கு கிடைக்கப் பெற்றிருக்கும் மத்திய ஆசிய பெண் தெய்வங்கள் நமது காளிக்கு எந்த வகையில் ஏற்புடையதாக இருக்கிறது என்பதையும், அந்த வழிபாட்டு முறை எவ்விதம் இந்தியாவிற்கு வந்தது என்பதையும் காண்போம்.

**பெண் தெய்வங்கள்**

மோடி என்றும் பழையோள் என்று பண்டைய தாய் தெய்வங்கள் அழைக்கப்பட்டுள்ளதை காண்கிறோம். பின்னர் அமுமா, ஆயி என்ற பெயர்களில் தாய் தெய்வங்கள் வழிபட்டு வந்துள்ளதை இலக்கியங்களின் மூலம் அறியலாம்.

பண்டைய சுமேரிய மக்கள் சீன் என்ற நிலா தெய்வத்தையும், உம்மா, இஸ்தார் என்ற பெண் தெய்வங்களையும் வழிபட்டு வந்துள்ளனர். சுமேரிய நாட்டு உம்மா என்ற பெண் தெய்வமே வடநாட்டில் உமாவாகவும், தமிழகத்தில் அம்மாவாகவும் மாறியுள்ளது. தமிழகத்தில் அம்மா, ஆயி, தாயி முத்தம்மா, நாடியம்மா, பச்சையம்மா, மாரியம்மா என்ற பெயர்களில் அழைக்கப்படுவது பாபிலோனிய உம்மாவிலிருந்து வந்ததே. நமது தமிழ், இனப்பற்று இவைகளை ஏற்க மறுப்பினும் வரலாற்று உண்மை இதுவே என்பதை மறுக்க முடியாது.

மேற்காசிய மக்களாலும் சுமேரிய மக்களாலும் வழிபட்டு வந்த பெண் தெய்வம் நானா, நீனா, நீனெவே, இன்னா என்று பல பெயர்களில் மருவி வணங்கப்பட்டு வந்துள்ளது.

வடநாட்டில் நைனாதேவி, நாளி, நயினி, நாணாதேவி என்ற சக்தி வழிபாடுகள் அனைத்தும் மேற்கு ஆசியாவிலிருந்து இந்தியா விற்கு வந்த நாணா, நீணா, நீனெவே என்ற பல பெயர்களில் வழிபடப்பட்ட பெண் தெய்வமே.

பின்னர் சக்தி வழிபாட்டோடு மேற்கு ஆசியாவின் மிகப் பழைய பெண் தெய்வமான இஸ்தார், அர்ட்டெமின் போன்ற பெண் தெய்வங்களும் இணைந்துள்ளதை பார்க்கிறோம்.

இந்த இஸ்தார் என்ற பெண் தெய்வம் சிங்கத்தின் முகத்தை யும், பெண்ணின் உடலையும், கொண்டதாக அகழ்வாராய்ச்சி யில் கிடைக்கப் பெற்ற ஓவியங்கள் காட்டுகின்றன. ஒரு படத்தில் இந்த பெண் தெய்வம் சிங்கம் போன்ற ஒரு மிருகத்தின் மேலிருந்து பல கைகளுடன் காணப்படுகிறது.

இதன் உருவமே இன்றைய சிங்க வாகனத்தையுடைய காளியின் உருவம் என்பதை எவரும் மறுக்க முடியாது.

பெயர், உருவ மற்றும் வழிபாட்டு முறைகளும் கோயில் களில், குறிப்பாக தென்னாட்டு கோயில்களில் உள்ள தேவதாசி முறையும் மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவிற்கு வந்ததே. இதைக் கொண்டு திரு. சட்டர்ஜி போன்ற அறிஞர்கள் திராவிடர்கள் மேற்கு ஆசியாவிலிருந்து இந்தியாவிற்கு வந்தவர்களே என்பதை உறுதிப்படுத்துகின்றனர்.

பலுசிஸ்தானிலுள்ள இங்லாஜ் என்ற இடத்தில் வழிபடும் பெண் தெய்வம் கொட்டரி, கொட்டவி, கொட்ட ரீச்சா என்ற பெயரில் இன்றும் வணங்கப்பட்டு வருகிறது. இந்தப் பெயர்களுடன் நம் நாட்டு கொற்றவை என்ற பெயருக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதையும் மறுக்க இயலாது.

காளி, சக்தி என்றும் காமாட்சி என்றும் அழைக்கப்படும் பெண் தெய்வங்கள் பேய் வழிபாட்டில் பிறந்தவைகளே. ஆஸ்ட்ரிக் இன மக்களால் காமோய் என்று வணங்கப்பட்ட பெண் தெய்வமே பிற்காலத்தில் காமாட்சியாக வழிபடப் பட்டுள்ளது. காமோய் என்ற பெயர் பேய்ப் பூதம் என்ற பொருளில் உள்ளது.

எனவே பண்டைய புராணங்களில் உலகெங்கிலும் நிலவிய தாய் வணக்கத்தையும், பேய் வணக்கத்தையும் இணைத்து இந்தத் தெய்வங்களைப் படைத்துள்ளனர் என்பது தெளிவாகிறது.

சக்தி வழிபாடு மேற்கு ஆசியா நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வந்தது என்பதைக் கண்டோம். அதைப் போலவே சாஸ்தா (ஐயப்பன்) வழிபாடு எங்கிருந்து வந்தது என்பதையும் காண்போம்.

**சாத்தன் பிறப்பும் மேற்கு ஆசியாவும்**

மேற்கு ஆசிய மக்களாகிய 'மிட்டானி' (Mittanni) 'ஈலமைட்டு', 'காசைட்டு', முதலிய பழங்குடி மக்களின் மொழிக்கும் திராவிட மொழிகளுக்கும் பல ஒற்றுமைகள் உண்டு. வழிபாட்டு முறைகளிலும் தமிழர்களின் பழந் தெய்வங்களுக்கும் மேற்கு ஆசிய பழங்குடி மக்களின் தெய்வ வழிபாட்டிற்கும் பல வகையில் ஒற்றுமையைக் காண முடிகிறது.

மிட்டானி இனத்தவரின் 'ஸாதவாஜ்' என்ற நூல் ஒன்று குதிரையைப் பற்றிக் கூறுகிறது. இதன் காலம் கி.மு. 1500. குதிரை வாகனமுடைய சாத்தன் ஸாத வாகனன் என்று அழைக்கப்படுகிறான். முண்டாமொழியில் ஸாத, ஸாதம் என்ற சொற்கள் குதிரையைக் குறிக்கின்றன. இதனால் மேற்கு ஆசிய பழங்குடி மக்கள் மூலம் சாஸ்தா வழிபாடு இந்தியாவிற்கு வந்துள்ளது என்று கருதலாம். சாதவாகனன் என்ற மன்னர் வம்சம் தென் இந்தியாவிலும் ஆண்டு வந்தனர் என்பதை இங்கு நினைவுகூற வேண்டும். மேற்கு ஆசிய மக்கள் ஆரியர்களாக இந்தியாவிற்கு வந்தவுடன் ஆரிய கலப்பால் தோன்றிய வடமொழியில் சாலிகோத்ரா என்ற சொல் குதிரையை குறிக்கிறது.

சாதவாகனர் என்ற சொல் மேற்கு ஆசிய பழங்குடி மக்கள் மொழிவழி பிறந்தது என்பது பல மொழி வல்லுனர்கள் கருத்து. சாத்தன் என்ற சொல் (ஸாத) சாத என்ற சொல்லிலிருந்து வந்திருக்க வேண்டும் என்று மொழி வல்லுனர் பிரிஸ்ல்ஸ்கி கருதுகிறார்.

ஆஸ்ட்ரிக் என்ற பழங்குடி மொழியில் இருந்து ஸாத, ஸாதவாகனர் இவைகள் பிறந்துள்ளது. ஆஸ்ட்ரிக் பழங்குடி மக்கள் மேற்கு ஆசியாவை தாயகமாகக் கொண்டு பின்பு பல இடங்களுக்கும் குடிபெயர்ந்தனர். மற்றும் ஆஸ்ட்ரிக் மொழியில் தாய்க்கடவுள் 'மாந்தோ' என்றழைத்தனர். 'மாதா' என்ற சொல் இதன்வழி பிறந்தது என்று கருத இடமுண்டு.

இதனை திரு. பி.எல்.சாமி அவர்களின் 'தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு' என்ற நூலில் இவ்வாறு காண்கிறோம்.

**''இந்தச் சாத்தனுடைய தாய், காரியின் தாய் காடுகாள் என்று கூறப்படுவதால் இந்த தாய் தெய்வம் வடக்கேயிருந்து ஆஸ்ட்ரிக் பழங்குடி மக்களிடமிருந்து தமிழர் பெற்றது என்று கூடக் கொள்ளலாம். ஆஸ்ட்ரிக் பழங்குடி மக்கள் தாய்க் கடவுளை 'மாத்ரசா' என்றழைத்தனர். போலினீசியா (Polynesan) மொழியில் மாதரசி என்றழைத்தனர். இந்த மாத்ரசா என்ற தாய் தெய்வத்தையே கார்த்திகை நட்சத்திரங்களாகக் கருதும் நம்பிக்கை பழங்குடி மக்களிடையே உள்ளது. கார்த்திகைப் பெண்களின் மகனாக குமரன் கருதப்பட்டது இக்கருத்தின் வளர்ச்சியாகும். ஆஸ்ட்ரிக் குடிகளிடமிருந்து பெற்ற தாய்த் தெய்வமானதால் 'பழையோள்' என்று கூறினர்.பழையர் என்றழைக்கப்படும் சங்க கால குடிகள் இந்த ஆஸ்ட்ரிக் இனத்தவரே என்றும் கருதச் சான்றுகள் உள்ளன''** என்று எழுதுகிறார்.

இவைகள் எல்லாம் இந்திய தெய்வங்களாக மத்திய ஆசிய மக்களிடமிருந்து வந்துள்ளன என்பதை உறுதி செய்கின்றன. இதைப் போன்றே சிவன், சிவலிங்கம், சூலாயுதம், குங்குமம், திருநீறு இவைகள் எல்லாம் மேற்கு ஆசிய மக்கள் வழிவந்தவைகளே என்பதை முன்பே எனது நூலில் வெளியிட்டுள்ளேன்.

இதைப்போன்றே இராமனுடைய வழிபாடும் மேற்கு ஆசியாவிலிருந்து வந்ததே என்று காட்ட இவைகள் எல்லாம் எடுத்துக் காட்டினேன். சமயம், மொழியியல், மானிட இயல், பண்பாடு இவைகள் இக்கருத்தை உறுதி செய்கின்றன.

# 3. இராமாயணம் நிகழ்ச்சி உண்மையானதா?

இராமாயணம் உண்மையில் நடந்த ஒரு நிகழ்ச்சியா என்பதே ஒரு கேள்விக்குறி! வரலாற்று ஆசிரியர்கள் திராவிட ஆரிய இனப் போராட்டத்தின் பிரதிபலிப்பே இராமாயணம் என்கின்றனர். இதனை வரலாற்று ஆதாரங்களோடு அவர்கள் எழுதியுள்ளார்கள். அவர்களின் கருத்தை இங்கு காண்போம்.

**''இராமாயணக் கதை என்பது ஆரியர்கள் தென் இந்திய தஸ்யூக்கள் அல்லது திராவிடர்கள் மீது படையெடுத்து வெற்றிபெற்றதைச் சித்தரித்துக் காட்டுவதாகும்.''** -'திராவிடரும் ஆரியரும்' பி.சிதம்பரம் பிள்ளை, பக்கம் 24.

**'திராவிடர்கள் தங்கள் மீது படையெடுத்து வந்த ஆரியர்களோடு கடும் போர் புரியவேண்டி இருந்தது. இந்த விஷயம் ரிக் வேதத்தில் அநேக சுலோகங்களாக இருக்கின்றன.'** - 'பூர்வீக இந்திய சரித்திரமும் நாகரிகமும்', டாக்டர் ரோஸ்சந்திர மஜீம்தார், பக்கம் 22.

**'இராமாயணம், தென்னிந்தியாவில் ஆரியர் பரவியதையும், வெற்றி கொண்டதையும் அறிவிக்கும் நூல்.'** - 'இந்திய சரித்திர பாகுபாடு' G.J. வர்க்கி, பக்கம் 15

**'இராமாயணக் கதையின் உட்பொருள் என்னவென்றால், ஆரிய நாகரிகத்திற்கும் ஆரியரல்லாத நாகரிகத்திற்கும் நடத்தப்பட்ட போராட்டமாகும்.'** - 'இந்து நாகரிகம்' ராதாகுமுத் முகர்ஜி, பக்கம் 14

**'ஆரியரல்லாதவர்களை ரிக் வேதத்தில் தாசர்கள் (சூத்திரர்கள்) என்றும், தஸ்யூக்கள் அசுரர்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆரியருக்கும், ஆரியரல்லாதவர்களுக்கும் இடையே இருந்த பகையை ரிக் வேதத்தில் பல இடங்களில் காணலாம்.'** - 'இந்து நாகரிகம்' ராதாகுமூத் முகர்ஜி, பக்கம் 69

இவைகள் எல்லாம் வால்மீகியின் இராமாயணம் திராவிட ஆரிய இன மக்களிடையே எழுந்த போராட்டத்தை அடிப்படை

யாகக் கொண்டு கற்பனையில் புனையப்பட்ட ஒன்று என்பதை புலப்படுத்துகின்றன. இதைப் பற்றி எழுதும் சி. பல்கே என்ற வரலாற்று அறிஞர்,

"What has been said above is not meant to imply that Valmiki wrote an historical chronicle, but it does accept an historical foundation for the main outline of the Rama story as found in Valmiki's work. It must be noted here however, that nowhere in Valmiki's Ramayana given to us, as it were on a plate; as will be shown later, we have to disect the vulgate Ramayana, cutting away interpolation. In order to find what probably was composed by Valmiki himself' (Religions Hindusim by Jesuit Scholars page 201)

இராமாயணம் ஒரு வரலாற்று தொகுப்பு அல்ல. இது வால்மீகி என்ற புலவனின் கற்பனையில் பிறந்த ஒன்றே என்று இவர்கள் கருத்து தெரிவிக்கின்றனர். அகழ்வாய்வு தடயங்கள் எதுவும் இராமன் வாழ்ந்ததற்கு இந்தியாவில் கிடைக்கப் பெறவில்லை. இராமனுக்கு கோயில் இருந்தது என்பது இராம வரலாற்றை உறுதிப்படுத்தும் ஒன்றாக இருக்க முடியாது.

மன்னர்களை தெய்வமாக வழிபடும் பழக்கம் மத்திய ஆசியாவிலும், இந்தியாவிலும் இருந்து வந்திருக்கின்றன. சைனா போன்ற நாடுகளிலும் மன்னன் இறைவழி வந்தவன் என்ற நம்பிக்கை இன்றும் உண்டு. இராமன் என்ற மன்னன் அல்லது வீரன் ஒருவனைப் பற்றிய செய்திகளை வால்மீகி தனது கற்பனை மெருகோடு இராமாயணமாக உலகுக்குப் படைத்தார். இந்த இராமன் யார்? எந்த நாட்டு மன்னன்? அவன் யாரை வெற்றி கொண்டான்? அதற்கு வரலாற்று ஆதாரங்கள் உண்டா என்ற வினாவிற்கு நாம் விடை காணும் போது இராமாயணத்தின் உண்மையை அறிய முடியும்.

இவைகளை நாம், ஆராய முற்படும்போது ஆரிய திராவிட இனப்போராட்டத்தையும் ஆராய வேண்டும். அதற்கு முன் திராவிடர்கள் யார்? இவர்களுக்கும் ஆரிய மன்னனான இராமனுக்கும் எவ்விதம் பகை எழுந்தது. திராவிடர்களின் தலைவன் இராவணன் யார் என்றும், இவர்கள் காலம் என்ன என்றும் நாம் விடை காண முற்பட வேண்டும. வரும் அத்தியாயங்களில் இவற்றைக் காணலாம்.

# 4. வால்மீகி இராமாயணம் - ஒரு ஆய்வு

**வா**ல்மீகி என்ற புலவர் எழுதிய இராமாயணத்தின் அடிப்படையில் தான் கம்பர், துளசிதாஸர் போன்றவர்களின் இராமாயணம் அவர் தம் நாட்டிற்கும், பண்பாட்டிற்கும் ஏற்ப மாற்றி எழுதப்பட்டுள்ளது. ஆனால் எல்லா இராமாயணங் களுக்கும் அடிப்படையான வால்மீகி இராமாயணத்திற்கும் பல வேறுபாடுகளை காண முடிகிறது. இது ஒரு கற்பனை கதையே என்று காட்டும் வகையில் சிலவற்றை மட்டும் காண்போம்.

இதைப் பற்றி ஆராய்ந்த அறிஞர் சி.பால்கே,

There are three widely different recension of the Valmiki Ramayana, each of which includes the two spurious books, one and seven. They are: The Southern Recension, the Bengal Recention and the North Western Recension. The Southern Recension has been printed in Bombay and in South India, The Bengal Recension was first printed in Paris in 1843. AD and later in Calcutta. The North Western Recension was published in Lahore in 1923 AD

1. Each recension has a large number of Verses, even longer passages and entire cantos, which are not to be found in one, or at times, even both of the others. Comparing the Sourthern and Bengal Recensions we find that one third of the verses are proper to each recension.

2. Each recension differs from one, or at times, even both of the other in the common verse, the Southern recension usually has the more original text.

3. The sequence of the verse is often different even in all three recensions.

செவி வழிச் செய்தியாக மனப்பாடமாக இராமாயணப் பாடல்கள் பல நூற்றாண்டுகளாக கேட்டு எழுதப்பட்டவை களானதால் ஒவ்வொரு வெளியீட்டிலும் வேறுபாடுகள் மலிந்து கிடக்கின்றன. பிற்காலத்தில் ஆரியர்கள் மட்டும் கல்வி கற்க வேண்டும், இறைவழிபாடு அவர்களுக்குரியது என்ற நிலை ஏற்பட்ட பின், பல இடைச் செறுகல்கள் இதில் ஏற்பட்டன. முழுமையான இராமாயணத்தை இரண்டாம் நூற்றாண்டில்தான் காண்கிறோம்.

சரியான இராமாயணம் எது என்ற முடிவிற்கு வர பழைய இராமாயண கைப்பிரதி எதுவும் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை. பரோடாவிலுள்ள ஓரியண்டல் நிறுவனம் (Oriental Institute of Baroda) இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட கையெழுத்துப் பிரதிகளைப் படித்து ஆராய்ந்து எண்பத்தாறு பிரதிகளை மட்டும் தேர்ந்தெடுத்தது. இவைகளில் ஒன்று நேபாளில் கிடைத்த பனை ஓலைச் சுவடியாகும். இதன் காலம் 1075 AD. ஆனால் இதன் காலத்தை 1020 AD என்றனர். மற்றவைகள் எல்லாம் 13ம் 14ம் நூற்றாண்டைச் சேர்ந்தவைகள்.

**வால்மீகி கி.மு. 300ல் எழுதிய இராமாயணம் பல நூற்றாண்டு களுக்குப் பின் கூட்டி குறைக்கப்பட்டு நமது கையில் கிடைத்தது. கி.மு. 300ல் எழுதிய வால்மீகி அவருடைய காலத்திற்கும் முன் பல நூற்றாண்டுகளுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை செவி வழிச் செய்தியாக கிடைக்கப் பெற்றதை தனது காலத்திற்கு ஏற்ப, ஊர் பெயர்களைச் சேர்த்து இராமாயணம் என்ற நூலை எழுதினார் என்பதே உண்மையாகும்.**

லட்சுமணன், ஊர்மிளா என்பவளை மணந்ததாக ஒரு நூலில் காண்கிறோம். லட்சுமணன் திருமணம் செய்யாதவன் என்று ஒரு நூலில் காணப்படுகிறது. இதுபோல் பல வேறுபாடுகள் மலிந்து காணப்படுகின்றன. இதனை விரிவாக காண்பதில் நமது ஆராய்ச்சிக்குப் பயனில்லை.

# 5. திராவிடர்களும் மத்திய ஆசியாவும்

மத்திய ஆசிய பண்டைய மக்களில் கபீரு (Khapiru) என்ற இன மக்களைப் பற்றிப் படிக்கிறோம். இவர்கள் நிலையான இருப்பிடமில்லாதவர்களாக அலைந்து திரிகிறவர்களாகக் காண்கிறோம். மாரியில் கண்டெடுக்கப்பட்ட அகழ் ஆய்வு சான்றுகளில் இவர்கள் 'ஹபீரு' (Hapiru) என்ற கூட்டத்தார் என்று குறிப்பிடப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

இம்மக்கள் பெரும்பாலும் அடிமைகளாக, கூலி வேலை செய்பவர்களாகவே இருந்து வந்திருக்கின்றனர். கிறிஸ்தவ திருமறையில் அடிமைகளை எபிரேயர் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இவர்கள் ஒரு இன மக்களாக இல்லாமல் பல கோத்திர மக்களாக இருந்து வந்திருக்கின்றனர். இவர்களைப் பற்றி வரலாற்றில் -

'அமென் ஹோதப் என்ற அரசன் காலத்திலும் (கி.மு. 1413 - 1377), அகனட்டான் காலத்திலும் (கி.மு.1377 - 1360) கானானிய சிற்றரசர்கள் 'ஹப்பீரு' என்னும் ஒரு ஜாதியார் தங்களுக்குத் தொல்லை கொடுப்பதாக எகிப்திய பார்வோனுக்கு எழுதின கடிதங்கள் கிடைத்து உள்ளன. இங்கு 'ஹப்பீரு' என்பதற்கும், திருமுறையில், 'எபிரேயர்' என்பதற்கும் தொடர்பிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது - (திருமறைத் தோழன், பக்கம் 114) நாடோடிகளாக வந்த செமித்திய கூட்டத்தினர் அனைவரும் திருமறையில் எபிரேயர் என்று அடிமைகளைக் குறிக்கும் சொல்லாகவும் பண்டைய வரலாற்றில் ஹப்பீரு என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

இக்கூட்டத்தினரின் வரலாறு நம் ஆய்வுக்கு முக்கிய மானதற்கு காரணம் எகிப்திய மன்னர் இராம்சேஸ் என்பவனுக் கும் இக்கூட்டத்தாருக்குமிடையே நடந்த போராட்ட வரலாறு இராமாயண கதைக்கும் நெருங்கிய தொடர்பு உடையதாகக்

காணப்படுகிறது. இந்த அடிமை கூட்டத்தார் இந்தியாவில் வட பகுதியில் ஆரியர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன்னர் குடிபுகுந்து தங்கள் நாகரீகத்தின் எச்சத்தை விட்டுச் சென்றிருக்கின்றனர். திராவிட இன மக்களுக்கும் இவர்களுக்கும் தொடர்பு காணப்படுகிறது. பின்னர் காணும் வரலாற்றில் இந்த அடிமை கூட்டத்தினர் மத்தியில் பத்திற்கும் மேற்பட்ட கோத்திரங்கள் இருந்தனர் என்றும் காண்கிறோம்.

மேலும் இவர்களைப் பற்றி வரலாற்றில் எபிரேயரக்கும் கபீரு (Kaabiru) அல்லது (Afiru) அல்லது ஹபீரு (Habiru) என்ற மக்களுக்குமுள்ள தொடர்பு என்ன என்ற கேள்வி இந்த இடத்தில் எழுகின்றது. எபிரேயர் (Hebrews) என்பது எபர் (Eber) என்ற பதத்திலிருந்து வருகின்றது. 'கபீரு' என்ற பதமும் இதற்கு ஒத்திருக்கிறது. மொசொப் பெத்தோமியாவில் மூன்றாவது ஊர் வம்சம் முதல் இப் பெயர் காணப்படுகின்றது. பதினைந்தாம் நூற்றாண்டு நூசி (Nuzi) ஏடுகளிலும், பதினெட்டாம் நூற்றாண்டு மாரி ஏடுகளிலும், பதினைந்தாம், பதினேழாம் நூற்றாண்டு அல்லாத் ஏடுகளிலும் இப்பெயர் அதிகமாக உபயோகிக்கப்படுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டு கப்பதோக்கிய ஏடுகள், 15 முதல் 12ம் நூற்றாண்டு வரையுள்ள எகிப்திய ஏடுகள் ஆகியவற்றிலும் இப்பெயருள்ள மக்களைப் பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

மேற்கூறிய எகிப்திய ஏடுகள் இவர்களை ஆசியாவிலிருந்து வந்த சத்துருக்கள், கலகக்காரர்கள் என்றும், எகிப்தின் அடிமைகள் என்றும், பதினான்காம் நூற்றாண்டு அமார்னா கடிதங்களில் பாலஸ்தீனாவிலும், சுற்றியுள்ள நாடுகளிலும் சமாதானத்தைக் குலைக்கின்றவர்கள் என்றும் கூறப்பட்டிருக் கிறது. எனவே, மேற்கு ஆசியா முழுவதும் கி.மு. 2000 ஆண்டு காலம் முதல் 1100 ஆண்டு காலம் வரையிலும் காணப்பட்ட கபீரு என்ற இனத்தவரான மக்களே எபிரேயரின் முன்னோடி யாயிருக்கலாம் என்று கருத இடமுண்டு. (பின்னர் வரும் வரலாற்றை காணும் போது இம் மக்கள் வரலாற்று காலத்திற்கு முன்பே ஆசியாவின் பல பாகங்களிலும் இந்தியாவின் வட பகுதியிலும் குடியேறியிருக்கலாம் என்று கருத முடிகிறது. இவர்களில் பல இனத்தவர்களைக் காண்கிறோம்)

ஆரம்பத்தில் கபீரு என்பது ஒரு இனத்தின் பெயரல்ல என்றும் சமுதாயத்தில் ஒரு வகுப்பினரான மக்களின் பெயர் என்றும் தெரிய வருகிறது. இவர்களுள் பல தனியாட்களின் பெயர்கள் பெரும்பாலும் செமித்திய தொடர்புடையதாக இருப்பினும் இதரப் பெயர்களும் காணப்படுகின்றன. எனவே கபீரு என்பவர்கள் பல இனங்களைச் சேர்ந்தவர்களாயிருந்தனர் என்பது தெளிவு. சமூகத்தில் குடி உரிமையோ, நிலை வரமான சொந்த நாடோ இல்லாத ஒரு மக்கட் கூட்டத்திற்கே இப்பெயர் வழங்கிற்று.

தேவைப்படும்போது கொள்ளைக்காரராகவோ, கூலிக்கு யுத்தம் செய்கிறவர்களாகவோ, அடிமைகளாகவோ வேலைக் காரர்களாகவோ இவர்கள் செயல் புரிந்தனர். எகிப்தில் அரசனின் வேலைக்காரராக இவர்களில் பலர் இருந்தனர். எனவே, கபீரு என்பவர்கள் இத்தகையதோர் வகுப்பினர் என்றே கூறலாம். - இஸ்ரவேலரின் வரலாறு (பாகம் 1) இரா. எட்வர்ட்சாம், பக்கம் 56-57.

''அவனுக்குப்பின் (ஹரமாப் Haremhab) ஹிக்ஸான் மரபைச் சேர்ந்த முதலாவது இராம்சேஸ் என்பவன் எகிப்தில் அரசனா னான் (கி.மு. 1310-1300). இவனது மகனான முதலாவது சேதாஸ் (Sethos I, 1309 - 1290) என்பவனே பத்தொன்பதாம் வம்சத்தை ஆரம்பித்தான். இவன் பாலஸ்தீனா முழுவதையும் கைப்பற்றி அடக்கியபோது, அங்கு அபீரு (Apiru) என்ற மக்களையும் எதிர்க்க நேரிட்டது என்று அறிகிறோம்.' - இஸ்ரவேலரின் வரலாறு, பக்கம் 86.

''இரண்டாவது இராமசேசின் நீண்ட ஆளுகையின் பிந்திய காலத்திலே நாட்டில் சமாதானம் நிலவியது. தேசத்தின் வரலாற்றிலேயே பல சிறந்த கட்டடங்கள் இக்காலத்தில் கட்டப்பட்டன. இவனது கட்டடப் பணியிலே வேலை செய்த அரசாங்க அடிமைகளுக்கு அபீரு (Apiru) என்ற பெயர் தரப்பட்டது. இக்காலத்தில் எகிப்துக்கும் ஆசியாவிற்கு மிடையில் நெருங்கிய தொடர்பு நிலவியது. கானானிய தெய்வங்கள் பல எகிப்தில் வழிபடப்பட்டன. பாகால், ஹாரான், ரெஷப், அஸ்தரோத்து, ஆனத் முதலிய பல பெயர்கள்,

இஸ்ரவேலர் எகிப்தில் அடிமைகளாக இருந்தனர் என்பது உண்மையான வரலாற்று நிகழ்ச்சியே என நிரூபிக்க உபயோகப்படுகின்றன." பக்கம் 68.

திராவிடர்கள் வட இந்தியாவிலிருந்து தென்னகத்திற்கு வந்தனர் என்பது வரலாறு. இதனை வெறும் மறுக்க முடியாது. திராவிடர்கள் வடமேற்கு இந்தியா வழியாக ஆரியர்கள் வருவதற்கு முன்பு வட இந்தியாவிற்கு வந்தவர்கள் என்பதை திரு.வி.கனகசபை, திரு. நீலகண்ட சாஸ்திரியார் போன்றவர்கள் ஏற்றுக் கொள்கின்றனர்.

இன்றும் ஆதி திராவிடர் என்று ஒரு இன மக்கள் இருப்பதானது அவர்களுக்குப் பின் வந்த ஒரு திராவிடர் உண்டு என்று தானே பொருள்படும்.

### நடு ஆசியாவிலிருந்து வந்தவர்

"நடு ஆசியப் பகுதியில் வாழ்கின்ற மாந்தர்களுக்கும், திராவிடர்களுக்கும் இடையேயுள்ள உடல் தோற்ற ஒற்றுமையும், ஒரு சில மொழி ஒற்றுமையும் கொண்டு, திராவிடர் நடு ஆசியாவில் இருந்து வந்தனர் என்று சிலர் கருதினர். இன்றைய ஈரானியப் பகுதியில் அன்று வழங்கிய மொழி, மக்களின் பெயர் 'சித்தியா' (Scythia) என்பதாகும். இந்த மொழிக்கும் இடையேயுள்ள ஒரு சில ஒற்றுமைகளைக் கொண்டு திராவிடர்களுடைய மூல இடம் 'சித்தியா' என்ற நடு ஆசியப் பகுதி எனக் கருதப்பட்டது. கால்டுவெல் இக் கொள்கையினர் ஆவார்."

### மேற்கு ஆசியப்பகுதியினர்

"இன்றைய ஈரான், ஈராக், சிரியா, பாலஸ்தீன், இஸ்ரவேல் ஆகிய மேற்கு ஆசிய நாடுகள் பண்டு பழைய நாகரீகங்களின் தொட்டில்களாக இருந்தன. மிகப் புகழ் பெற்ற மெசபடோமியா, சுமேரியா, பாபிலோனியா நாகரீகங்கள் தோன்றிய இடம் இங்குதான் உள்ளது. இந்நாகரீகங்களும் திராவிட நாகரீகம் என்று கருதப்படும்." - தமிழரின் தாயகம் - டாக்டர் க.ப.அறவாணன், பக்கம் 23

‘திராவிட மக்கள் தம் தலை ஒட்டு அமைப்பு நடுநிலக் கடலோர மக்கள், ஆப்பிரிக்க மக்கள் தம் தலை ஒட்டு அமைப்புடன் ஒத்துள்ளது. மொகஞ்சதாரோவில் கண்டு எடுக்கப்பட்ட மனித எலும்புக் கூடு ஆப்பிரிக்க நாடுகளான ஜெரிக்கோ (Jericho), மேல் கலிலி (Upper Galilee), வடக்கு ஈரான் (North Iran), எகிப்து (Egypt) கென்யா (Kenya), தங்கனீகா (Thanganyiga) போன்ற இடங்களில் கண்டு எடுக்கப்பட்டுள்ளன. எலும்புக் கூடுகளுடன் முற்றும் ஒத்துள்ளவை வியக்கத்தக்கது.’’ - தமிழரின் தாயகம், பக்கம் 42

திராவிடர்கள் மத்திய ஆசியாவிலிருந்து வந்தவர்கள் என்பதை உறுதி செய்யும் வகையில் வழிபாட்டு முறைகளில் பல ஒற்றுமைகளை காண முடிகிறது.

நாக வழிபாடு, காளை வழிபாடு, நடுகல் வழிபாடு, பலி கொடுத்தல், பலிபீடத்தை வணங்குதல், திருநீறு பூசுதல், பலியிட்ட இரத்தத்தைக் கொண்டு பொட்டு வைத்தல் போன்ற இவைகளில் ஒற்றுமை தென்படுகிறது. இதனை எனது ‘இந்து மதம் இந்திய மதமா?’ என்ற நூலில் விளக்கியுள்ளேன்.

## 6. எகிப்திய மன்னன் இராமசேஸ்

எகிப்திய மன்னன் இரண்டாம் இராமசேஸ் என்பவனுக்கும் வால்மீகியின் இராமாயண கதாநாயகன் இராமனுக்கும் பல வகை தொடர்புகளை காண்கிறோம். ஒரு மன்னனின் வீரத்தை அல்லது ஒரு வீரனின் வீரத்தை அடிப்படையாகக் கொண்டு இலக்கியங்கள் படைப்பது அக்கால மரபு என்றால் மிகையல்ல. இராமசேஸ் மன்னனின் வரலாறும் மத்திய ஆசிய வரலாறும் மிகச்சிறப்புற்ற ஒன்றாகும். இவன் படைத்த நகரங்களும் கற்தூண்களும் இன்றும் இவனது வீரத்தையும் புகழையும் பறைசாற்றுகின்றன.

அரசன் இறைவழி வந்தவன் என்றும் வழிபாட்டிற்கு உரியவன் என்ற கருத்துக்கள் எகிப்து, மத்திய ஆசிய மக்களிடையே இருந்தது. மன்னவனையே இறைவனாகக் கருதி இலக்கியங்கள் எழுந்தன. அவ்வித படைப்பே இராமாயணம்!

எகிப்திய மாமன்னன் இராமசேஸ் வரலாற்றை இங்கு காண்போம்.

பழைய எகிப்தின் வரலாற்றை மூன்று காலப் பிரிவுகளாகப் பகுக்கலாம்.

1. பண்டையப் பேரரசு அதாவது கி.மு. 2000 ஆண்டு களுக்கு முற்பட்ட நூர்நுனிக் கோபுரம் (பிரமிட்) காலம்.

2. மத்தியப் பேரரசு காலம் 2000 - 1720 இப்பிரிவு சுமார் கி.மு. 1720 - 1890 இல் போரிட்ட ஹிச்சாஸ் என்னும் ஆரியர் ஆளுகையுடன் இறுதி பெற்றது.

3. புதுப் பேரரசு கி.மு. 1560க்குப் பிற்பட்ட காலம். 30 வம்சங்கள் எகிப்தை ஆண்டன என்பது பரம்பரைச் செய்தி. இதில் XIV - XVI வம்சங்கள் ஹிக்சாஸ் வம்சங்கள். மத்திய பேரரசிலிருந்து எகிப்திய மன்னர்கள் பார்வோன்கள் என்று அழைக்கப்பட்டனர். பார்வோ என்றால் பெரிய வீடு என்று பொருள். பெரிய வீட்டில் வசிப்பவர் பார்வோன் எனப் பட்டனர்.

அக்காலத்தில் அரசர் மட்டுமே பெரிய வீடுகளில் வசித்தனர்.

இந்த பார்வோன் மன்னர்களில் மிகவும் புகழ் பெற்றவன் இரண்டாம இராமசேஸ். வீரமிக்கவன், பல கலைகள் பயின்றவன். வில் வித்தைகளில் தேர்ந்தவன். பல நாடுகளை வென்றவன். இவன் காலத்தில் தான் மோசே தலைமையில் அடிமைகள் புரட்சி செய்து நாட்டை விட்டு வெளியேறினர். இதுபற்றி எழுதும் திரு இரா. எட்வர்ட் சாம் அவர்கள்,

'முதலாம் செதாஸ் (Sethos I 1400 - 1290). இரண்டாவது இராம்சேஸ் (1200 - 1223) ஆகியோரின் காலமாகும். ஏனெனில், இரண்டாவது இராமசேஸ் காலத்தில்தான் இப்பட்டிணம் (Avaris ஆவாரிஸ்) புதுப்பித்துக் கட்டப்பட்டது. மேலும் புதைபொருள் ஆராய்ச்சியின் முடிவும் பதின்மூன்றாம் நூற்றாண்டு என்ப தாகும். மர்னிப்தாவின் கல்தூண்படி 1220 இல் இஸ்ரவேலர் அங்கிருந்தனர். அதோடு எண் 20, 21 இல் சொல்லப்படும் ஏதோம், மோவாப் என்ற இடங்களின் பக்கமாக இஸ்ரவேலர் செய்த பிரயாணம் பதின்மூன்றாம் நூற்றாண்டுக்கு முன்னதா யிருக்க இயலாது; ஏனெனில், பதின்மூன்றாம் நூற்றாண்டுக் காலத்தில்தான் இவை தோன்றின. ஆகவே, இச்சான்றுகளின் படி இந்நூற்றாண்டிலேயே இவ்விடுதலை நடைபெற்றது என்றும், இஸ்ரவேலரை ஒடுக்கத் தொடங்கிய பார்வோன் முதலாவது செதாஸ் என்பவன் என்றும், இரண்டாம் இராமசேஸ் என்பவனின் காலத்தில்தான் அவர்கள் பிரயாணத்தில் புறப்பட்ட னர் என்றும் கூறலாம்.' - (இஸ்ரவேலரின் வரலாறு, பக்கம் 76, 77).

இராமசேஸ் மன்னரின் வரலாற்றில் அடிமைகள் புரட்சி செய்து நாட்டை விட்டு வெளியேறியது முக்கிய நிகழ்ச்சி யாகும். **'அவர்களுக்கு தலைமை தாங்கிய மோசஸ், யோசுவா இவர்களின் வாழ்க்கையையும் இராமசேஸ் வாழ்க்கையையும் செவிவழிச் செய்தியாக கேட்ட வால்மீகி இராமன் என்ற புதிய கதாபாத்திரத்தை இராமசேஸ், மோசஸ் இவர்கள் சார்ந்து புதிய படைப்பாக தோற்றுவித்துள்ளார்.'**

இராமசேஸ் காலத்தில் 'ஹப்பீரு' என்ற அடிமை ஜாதியினர் தொல்லை கொடுப்பதாக சிற்றரசர்கள் பார்வோனுக்கு எழுதிய கடிதங்கள் புதை பொருளாக கிடைத்துள்ளன.



படம் - 1

கிறிஸ்தவ திருமறையில் யாத்திராகமம் 1:11 இல் இஸ்ரவேல் அடிமைகள் பார்வோனுக்காக பித்தோஸ், ராமசேஸ் என்னும் பண்டகசாலைப் பட்டணங்களைக் கட்டினார்கள் என்று காண்கிறோம். இதுவும் தொல்பொருள் ஆய்வில் மெய்ப்பிக் கப்பட்டுள்ளது.

''ராம்சேஸ் பட்டிணம் முதலாம் சேதி, இரண்டாம் ராம்சேஸ் ஆகியோர் தலைநகரென்றும், இது 'இராமசேஸின் வீடு' என்று அழைக்கப்பட்டதென்றும், கி.மு. பதினோராம் நூற்றாண்டுக் குப் பின் தானிஸ் (Tanis) என்று அறியப்பட்டதென்றும் தெரிய வருகிறது. 'ஹபீரு' (Hepiru) என்னும் ஒரு ஜாதியினர் இரண்டாம் இராமசேசுக்காகக் கற்களைச் சுமந்து கோயில்களைக் கட்டினர்' என்று எகிப்திய ஏடுகள் குறிப்பிடுகின்றன' - (திருமறைத் தோழன் பக்கம் 115)

இது இராமனுக்காக இலங்கைக்கு பாலம் கட்டியதை நினைவு கூறுகிறது.

இரண்டாம் இராம்சேஸ் காலத்தைப் பற்றி எழுதும் வரலாற்று ஆசிரியர் முதலாம் சேதி (Sethi I கி.மு. 1318 - 1301. இரண்டாம் இராம்சேஸ் (Ramases II கி.மு. 1201 - 1234) ஆகியோர் காலத்தில்

நாடு செழிப்புற்றது என்றும் மெர்னெப்தாவின் நடுகல் (The Stele of Mer - He - Ptah கி.மு. 1230) ஆசியாவில் இவன் பெற்ற வெற்றியைப் புகழ்ந்து எழுதி இருப்பதைக் காணலாம்.

இரண்டாம் இராம்சேஸ் ஏத்தியரோடு (Hittite) பத்தாண்டு காலம் தொடராக போர் செய்தான் என்றும் காண்கிறோம். இம்மன்னன் காலத்தில் பலரை வெற்றி கொள்ள வேண்டியிருந்தது. ஐரோப்பிய அருங்காட்சிப் பொருட்கூடத்தில் காணப்படும் ஒரு ஓவியத்தில் இம்மன்னன் பத்து அரசர்களை வெற்றி கொண்டதை 10 தலைகளோடும், 20 கால்களோடும் இருப்பதை காண்கிறோம்.

மற்றும் சூரியக் கடவுளான இரா என்ற கருட முகத்தைக் கொண்ட எகிப்திய தெய்வம் இவருக்கு அருள் புரிவதைப் போலவும் அந்தப் படத்தில் சித்தரிக்கப்பட்டுள்ளது. (படம் 1 காண்க). இங்கு திரு. சி.பல்கே (C. Bulcke) வால்மீகி இராமாயணத்தில் இராவணனைப் பற்றி எழுதியதை நினைவு கூறலாம்.

**"The origin of the belief that Ravana had ten heads, for instance, is fairly simple. The numerical prefix of many names in Sanskrit is often to be taken in a metaphorical sense. Ravana had been called Dasagriva (ten necked), that is, having the strength of ten. In the course of time, this figure of speech was taken literally. However there are many passages where Ravana. It described asleep (V. Canto 10). Explicit refrence is made to his two powerful arms (in the dual, V. 15-22) to his radiant countenance (the singular being used, V 25) and to the breath issuing from his mouth (again the singular being used, V 24)" - (Religious Hinduism, page 203)**

**பத்து கோத்திரத்தைச் சேர்ந்த அல்லது பத்து இனத்தைச் சேர்ந்த அடிமை அரசர்கள் ஒன்று திரண்டு ஒரு கூட்டணியாக எதிர்த்து தோல்வியுற்றதை மிகைப்படுத்தி பத்து தலையுடையவனாக ஆக்கப்பட்டான் என்ற உண்மையை ஆராய்ச்சியாளர்கள், அறிவுடையவர்கள், சிந்தனையாளர்கள் மறுக்க முடியாது.**

இராவணனுக்கு பத்து தலைகள் இருந்ததாக ராமாயணத்தில் வால்மீகி எங்குமே எழுதவில்லை. - (மாலைமலர் - தீபாவளி மலர் 2007 - பக்கம் 83). மோசஸ் 10 கோத்திரத்தோடு பார்வோனை எதிர்த்ததை 10 தலை இராவணனாக பின்னர் புனையப்பட்டது.

பார்வோனை எதிர்த்து சென்ற அடிமைகளில் பல ஜாதியினர் போனார்கள் என்பதை கிறிஸ்தவ திருமறையில் யாத்திராகமம் 12:38, எண்ணாகமம் 11:4 ஆகியவற்றிலும் காண்கிறோம். இந்த பலதரப்பட்ட மக்களின் தலைவனாக மோசஸ் தேர்ந்தெடுக்கப் பட்டான். அடிமை வம்சத்தாரிடையே மோசஸ் பெருந்தலைவ னாக வணக்கத்திற்குரியவனாக இருந்தான். எகிப்து மக்களிடையே இரண்டாம் இராம்சேஸ் இறைவனாக மதிக்கப் பட்டான். இதனை மூதாதையர் வழிபாடு (Ancesster worship) என்பர் சமய ஆராய்ச்சியாளர்கள். மத்திய ஆசியாவிலிருந்து வந்த மக்கள் இவர்கள் இருவருடைய வரலாற்றையும் அக்கால முறைப்படி செவிவழிச் செய்தியாக நாடோடிப் பாடலாக பாடி வந்தனர். **இதன் பிரதிபலிப்பே வால்மீகியின் இராமாயணம்**. பின்னர் வரும் பகுதிகளில் இதனை விரிவாகக் காணலாம்.

## 7. இராம்சேஸ் - இராமன் வரலாற்று ஒற்றுமைகள்

மத்திய ஆசிய மக்கள் அரசன் இறைவழி வந்தவன் என்றும் வழிபாட்டிற்கு உரியவன் என்றும் கருதி வந்ததைக் கண்டோம். இங்கிலாந்து அருங்காட்சியகத்திலுள்ள ஓவியத்தில் எகிப்திய மன்னர்கள் 'இரா' என்ற பருந்து தலையை உடைய சூரிய தெய்வத்தின் மைந்தர்களாகக் கருதப்பட்டனர். இவர்கள் ஆட்சியில் இரா தெய்வத்தின் ஆலயப் பூசாரிகள் மிகவும் மதிப்பிற்கு உரியவர்களாகவும், அரசரிடையே செல்வாக்கு உடையவர்களாகவும் இருந்தனர்.

இராமன் சூரிய வம்சத்தவனாகவும் தசரத வாழ்க்கையில் மதப்பூசாரிகள் மிகவும் வல்லமையுடையவர்களாக இருந்ததை யும் காண்கிறோம். ஆட்சியில் விசுவாமித்திரன் போன்றவர்கள் செயற்கரிய காரியங்களைச் செய்தனர் என்றும் காண்கிறோம். பின்னர் இராமன் விஷ்ணு அவதாரமாக எழுதப்பட்டான். விஷ்ணு கருட அவதாரம் எடுத்து இராமனுக்கு உதவியதை இராமாயணத்தில் காண்கிறோம். இதைப் பற்றி எழுதும் வரலாற்று ஆசிரியர்,

**"From the point of view of later development in the Rama story, the most important change introduced is the fact that Rama came to be considered as an avatar of Vishnu. A dispassimate examination of the original sources show clearly that according to Valmiki, Rama was a noble king and a great warrior, but definitely not divine'. - Religious Hinduism, page 209.**

இராமன் என்ற மன்னவன் கதை பின்னர் தெய்வீகத் தன்மை வாய்ந்ததாக மாற்றப்பட்டது என்பதும் எகிப்திய சூரிய தெய்வமான கருட தலையை உடைய 'இரா'விற்கும் இராமனுடைய விஷ்ணு அவதார கதைக்கும் வரலாற்று ஒற்றுமை உண்டு என்பதையும் காண்கிறோம். படம் 1 இதனை நன்கு புலப்படுத்துகின்றன.

வீரமிக்க இராம்சேஸ் மன்னன் வில் வித்தைகளில் வல்லவன் என்பதை எகிப்திய வரலாறு மூலம் நாம் அறிகிறோம். படம் எண் 2 இதனை நமக்கு சான்று பகர்கிறது.

வரலாற்றில் இரண்டாம் இராம்சேஸ் மனைவியைப் பற்றிய வரலாறு சரியாக கிடைக்கப் பெறவில்லை. இவனுடைய வரலாற்றைக் கொண்டு தயாரிக்கப்பட்ட பத்து கட்டளைகள் Ten Commandments என்ற திரைப்படம், பல வரலாற்றின் பின்னணிகளை நன்கு ஆராய்ந்து எடுக்கப்பட்டது.

இரண்டாம் இராம்சேஸின் தந்தை பார்வோன் ஒரு பெண்ணை வளர்ப்பதைக் காண்கிறோம். இவள் இவனுடைய மகள் என்ற கருத்தும், வளர்ப்பு பெண் என்ற கருத்தும் உண்டு. எபிரேய அடிமைகளின் பெருக்கத்தைக் கண்டு பயந்த பார்வோன் எபிரேய ஆண் பிள்ளைகளை கொன்று விடும்படி கட்டளை இடுகிறான். மோசஸின் தாய் தன் மகனைக் காக்கும்படி ஒரு கூடையில் தன் மகனை வைத்து ஆற்றில் விடுகிறாள். அரசி குளிக்கும் இடத்தில் கூடையை அரசி காணும்படி விடுகிறாள். கூடையைக் கண்ட அரசி அதில் இருக்கும் அழகான ஆண் குழந்தையை அரண்மனையில் வளர்க்கிறாள். கூடையை எடுத்த தாதிப் பெண் மட்டுமே மோசஸின் உண்மை வரலாற்றை அறிந்தவளாக அவனை அரசியுடன் இருந்து வளர்த்து வருகிறாள்.

பார்வோனின் மகன் இரண்டாம் பார்வோன் (இரண்டாம் இராம்சேஸ்) தன் தந்தை வளர்க்கும் பெண்ணை விரும்புகிறான். அவள் அரண்மனையில் வளரும் மோசஸ் மீது அன்பு கொண்டவளாக இருக்கிறாள். இருவரில் எவரை மணப்பது என்று அறியாதவளாக அவள் இருக்கும்போது, எத்தியோப்பியாவை பார்வோனின் சேனைகள் மோசஸ் தலைமையில் சென்று வெற்றி கொள்கிறது. அந்த வெற்றி விழாவின் போது பார்வோன் அந்தப் பெண்ணை மோசஸ் மணமுடிக்க தருவதாக அறிவிக்கிறான். (இது இராமன் வில்லை வளைத்து சீதாவைப் பெற்றதை நினைவூட்டுகிறது)

ஆனால் பின்னர் தாதிப்பெண் மூலமாக மோசஸ் அடிமை இனத்தைச் சேர்ந்தவன் என்றறிந்த பார்வோன் அவனை நாடு கடத்துகிறான்.

'இராமாயணத்தில் கூனி, சதியின்படி இராமன் நாடு கடத்தப்படுகிறான் என்பதையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.' மோசஸ் நாடு கடத்தப்பட்டவுடன் அவளை இரண்டாம் பார்வோன் மணக்கிறான். இவள், இவனுக்கு தங்கை முறை வருவதாகக் காண்கிறோம்.

இங்கு சீத்தாவின் வரலாற்றைக் காண்போம்.

**"A very characteristic change which was different by religious reverence for Sita is that in most of these works the real Sita is not kidnapped by Ravana but only an illusory or shadow Sita (Mayasita or Chaya sita). Valmiki's silence regarding the orgin of Sita has given rise to great variety of birth stories. Besides the story in the Vulgate Ramayana, according to which Sita was born out of a fursow, there is also the story that she was the daughter of Janaka (Mahabhara) or of Ravana and Mandodari (in several Jain Rama stories and in the Tibetian Ramayana) and if not of these, then atleast born at Lanka (Abdhuta and Ananda Ramanaya) and even as the daughter of Dasaratha and the sister of Rama (Dasaratha Janaka). Then also the episode of her repudiation has taken on various forms'. - (Religious Hinduism, page No 214)**

இவைகளைப் படிக்கும்போது இராமர், சீத்தா இவர்களின் புராண வரலாற்றிற்கும் இரண்டாம் இராமசேஸ் மன்னனின் வாழ்க்கை வரலாற்றிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை மறுக்க முடியாது. பக்தி, மத வைராக்கியம், இவைகள் நமது அறிவுக் கண்களை மங்கச் செய்து, மதப் பற்றின் காரணமாக உண்மை என்று தெரிந்தும் கூட, படித்த பலரும் இல்லாத ஒன்றை இருப்பதைப் போல் எண்ணி, பேசி தேவையற்ற மதப் பூசல்களை ஏற்படுத்தி வருகின்றனர். உண்மை இறைவனை காண மறந்து விடுகின்றனர்.

கீழ்க்கண்ட யூத வரலாறு இராமன் - சீதா திருமண சந்திப்பை நினைவூட்டுகிறது.

**"Thanri was the daughter of the king of the Ethiopians, she happened to see Moses as he led the army near the walls and fight with great courage, and admiring the subtility of his under-**

**takings, and believing him to be the author of the Ethiopians success, when they had before despised of recovering their liberty, to be the occations of the great danger the Ethiopians where to, when they had before boasted of their great achievement. She fell deeply in love with him, and upon the prevalency of that passion, sent to him the most faithful of all her servants to discuss with him about their marriage.' - (Antiquities of Jesus, page No 58)**

நான் முன்பே குறிப்பிட்டதைப் போல மோசஸ், இராம சேஸ் இவர்களுடைய வரலாற்று நிகழ்ச்சிகள் ஒன்று சேர்க்கப்பட்டு இராமனுடைய கதையோடு இணைக்கப்பட்டிருப்பதை இதுபோன்ற பல நிகழ்ச்சிகளில் காண்கிறோம்.

எகிப்து, ரோம கிரேக்க தெய்வங்களின் புராணங்களைப் படிக்கும்போது, இம்மக்கள் சேர்ந்து வாழும் இடங்களில் அந்த நாட்டுப் புராணக் கதைகள் ஒன்று கலந்து புதிய புராணமாக படைக்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம். அறிஞர் அண்ணா எழுதிய 'மாஜிக் கடவுள்கள்' என்ற நூலிலும் இதனைக் காண முடிகிறது. இத்தகைய புராணக் கதைகளோடு இணைக்கப்பட்ட கதைகளே நமது நாட்டுப் புராணங்களாகும். ஸ்கந்தன் வழிபாடு, சக்தி வழிபாடு, சாஸ்தா வழிபாடு இவைகள் எல்லாம் இவ்விதமாகத் தோன்றியதே.

மோசஸ் வரலாற்றில் பார்வோன் மன்னன் முன்பு தனது அடிமைகளை நாட்டை விட்டு வெளியேற அனுமதி கேட்கிறான். பார்வோன் அனுமதி மறுக்கும்போது தன் கையிலுள்ள கோலை பார்வோன் முன்னால் போடுகிறான். அது நாகமாக மாறுகிறது. பார்வோனுடனிருந்த எகிப்திய மந்திரவாதிகளும் தங்கள் கோலை கீழே போட அவைகளும் பாம்பாக மாறுகின்றன. ஆனால் மோசஸ் ஏற்படுத்திய நாகம், மற்ற எல்லாப் பாம்புகளையும் விழுங்கி விடுகிறது. இந்த நிகழ்வை திருமறையில் காண்கிறோம்.

**'இராம கதையில் இராமன் பாம்புகளை அம்பாக வைத்து வில் விடுவதாகக் காண்கிறோம். மத்திய ஆசிய செவி வழிச் செய்திகளே இராமாயணத்திற்கு கருப்பொருளாக இருந்தது என்பதை இவைகள் மெய்ப்பிக்கின்றன.'**

**இராமாயணத்தின் தோற்றம்**

மத்திய ஆசிய மக்கள் ஆரியர்களாக இந்தியாவிற்கு வந்த போது கருப்பு நிற திராவிடர்களை எதிர்க்க வேண்டியுள்ளது. ஹுபீரு மக்கள் மத்திய ஆசியாவில் இருந்த போது இந்த ஆரிய வம்ச மன்னர்களை எதிர்த்து, புரட்சி செய்து, போரிட்டு விடுதலை பெற்று உலகின் பல பாகங்களிலும் சென்றிருந் தனர். திராவிட மக்களின் எதிர்ப்பு ஆரியர்களின் ரிக் வேதத்தில் பல பாகங்களில் காண்கிறோம். இந்த போராட்டமே, சிலேடைப் பொருளாக இராமாயணத்தில் தோன்றியது என்பது வரலாற்று ஆய்வாளர்களின் கருத்து. இதன் அடிப்படையில்தான் வரலாற்று ஒற்றுமைகளைக் கொண்டு இராமாயணத்தில் கதாநாயகன் இராமனின் கதாபாத்திரம் எகிப்திய மன்னன் இரண்டாம் இராம்சேஸ் மற்றும் மோசஸ் இவர்களைப் பற்றிய செய்திகளை செவிவழிச் செய்தியாக, நாடோடிப் பாடலாக கேட்டு, மனதில் கொண்டு படைக்கப்பட்ட ஒன்றாகும்.

'இது ஒரு உண்மைக் கதை இல்லை என்பதும், வரலாற்று ஆதாரங்கள், அகழ்வாராய்ச்சி தடயங்கள் ஏதும் இல்லாத ஒன்று என்றும் அறிவுடையோர் முடிவு.' இதைப் பற்றி பல்வேறு ஆசிரியர்களின் கருத்தைக் காண்போம்.

'இராமாயணக் கதையின் உட்பொருள் என்னவென்றால் ஆரிய நாகரீகத்திற்கும் ஆரியரல்லாத நாகரீகத்திற்கும் (அவற்றின் தலைவர்களான ராமன், ராவணன் ஆகியவர்களால்) நடத்தப்பட்ட போராகும். - சிந்து நாகரீகம் - ராதா குமுத் முகர்ஜி, பக்கம் 141

'ராமாயணத்தில் தென்னிந்தியா (திராவிடர் தேசம்) தஸ்யூக்கள் என்ற ராட்சதர்களுக்குச் சொந்தமாக இருந்தது. இவர்கள் வட இந்தியாவிலிருந்து வந்த ஆரியர்களைப் போலவே நாகரீக மடைந்தவர்களாக இருந்தார்கள்.' - இந்திய சரித்திரம் - பி.டி. சீனிவாசய்யங்கார், பக்கம் 16.

'திராவிடர்களை ஆரியர்கள் வென்று விட்ட அகங்காரத்தால் குரங்குகள் என்றும் கரடிகள் என்றும், ராட்சதர்கள் என்றும் எழுதி வைத்தார்கள். இந்தப்படி இழிவுபடுத்தப்பட்ட வகுப்பாரிடமிருந்தே பல நாகரீகங்களை இந்தப் பிராமணர்கள் கற்றுக் கொண்டார்கள்.' - இந்தியா அன்றும் இன்றும் - ஷோஷி சந்தர்டட், பக்கம் 15.

'ராமாயணக் கதை என்பது ஆரியர்கள் தென் இந்திய தஸ்யூக்கள் அல்லது திராவிடர்கள் மீது படையெடுத்து வெற்றி பெற்றதைச் சித்தரித்துக் காட்டுவதாகும்.' - திராவிடரும் ஆரியரும், வி.சிதம்பரம் பிள்ளை, பக்கம் 24.

'ராமாயணக் கதையானது புரோகித வகுப்பாருக்கும் யுத்த வீரர்களுக்கும் நடந்த போரைக் குறிப்பதாகும். ராமாயணத்தில் குறிக்கப்பட்டுள்ள குரங்குகள், கரடிகள் என்பவை தென் இந்தியாவில் உள்ளவர்களை, ஆரியரல்லாதவர்களைக் குறிப்பதாகும்.' - பண்டை இந்தியாவின் நாகரீகம் - ரோமேஷ் சந்திரடட், பக்கம் 139-141.

'ஆரியக் கடவுள்களாகிய இந்திரனையும், இதர கடவுள்களையும் பூசித்தவர்களைப் பின்பற்றியவர்களும், தேவர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். இந்த ஆரியக் கடவுள்கள் வணக்கத்தை எதிர்த்தவர்கள் அசுரர்கள் என்று அழைத்தார்கள். இந்த இரு கூட்டத்தாருக்கும் விடாப் பகை இருந்து கொண்டே வந்தது.' - ரிக் வேத காலத்து இந்தியா' - ஏ.ஸி.தாஸ், பக்கம் 151.

'பாரத ராமாயணங்கள் முதலிய இதிகாசங்களில் காட்டு மிராண்டிகளும், அசுரர்களும், ராட்சதர்களும் தஸ்யூக்களும் வசிக்கும் நெருக்கமான நாடுகள் கொண்ட நாடு என்று குறிப்பிட்டிருப்பதெல்லாம் தென்னிந்தியாவைப் பற்றியதாகும்.' - இந்தியா - ஜி.எச். ராபின்சன், பக்கம் 155.

இவர்கள் எல்லாருடைய கருத்துக்களை பிரதிபலிக்கும் வகையில் பல்வேறு வரலாற்று ஆசிரியர்களும் எழுதி வைத்துள்ளனர். இராமாயணத்திற்கு எந்தவித வரலாற்று ஆதாரங்களும் கிடையாது. இந்தியாவிற்கு வந்த ஆரியர்கள் இராம்சேஸ் காலத்தைப் போலவே திராவிட மக்களின் எதிர்ப்பை எதிர் நோக்க வேண்டியிருந்தது. அவர்களை வெற்றி கொள்ள தங்கள் தெய்வத்திடம் வேள்வி நடத்தினர். வேண்டிக் கொண்டனர். இவைகளை வேதப் பாடங்களில் காண்கிறோம்.

வால்மீகி தான் கேட்ட கதைகளை தன் காலத்திற்கு ஏற்ப இரண்டாம் இராம்சேஸ் மன்னனின் வாழ்க்கையோடும், மோசஸ் வாழ்க்கையோடும் பிணைத்து இராமாயணம் என்ற ஒரு காவியத்தைப் படைத்தார். அந்தக் காலத்தில் இந்தக் காவியத்திற்கு முக்கியத்துவம் தரப்படவில்லை. இராமன்

கடவுளாக மதிக்கப்படவில்லை. பிற்காலத்தில் பல இராமாயணங்கள் இதன் வழி எழுந்தன. இராமன் விஷ்ணுவின் அவதாரம் என்ற கருத்து பரவியது. இராமன் கடவுளாக்கப் பட்டான்.

"The Rama story does not occupy a very important place in the oldest Puranas. Its religious significance came much later. But classical Sanskrit literature bears the imprint of Valmiki's genius. All poets have undergone his influence and many have retold this Rama story'. - The Ramayana, Religious Hinduism, page 213

காளிதாசனுடைய இராமாயணம் கி.பி.8ம் நூற்றாண்டும், கம்பர் இராமாயணம் கி.பி. 1200லும் எழுதப்பட்டது. இந்தக் காலங்களின் இடையே இருபதிற்கும் மேற்பட்ட இராமாயணக் கதைகள் பிறந்துள்ளன. இக்கதைகள் எல்லாமே அவர் தம் கற்பனைக்கும் காலத்திற்கும் ஏற்ப இராமனுக்கு முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்டுள்ளது.

எட்டாம் நூற்றாண்டில் ஆழ்வார்கள் பக்தி இயக்கம் ஏற்பட்ட பின்னர் தான் இராம சரித்திரம் பிரபலமானது. தெய்வீகத் தன்மை வாய்ந்ததாகப் போற்றப்பட்டது. கி.பி. 11ம் நூற்றாண்டில் இது மிகவும் வலுவடைந்தது. இராமாயணம் ஒரு காவியமாகப் படைக்கப்பட்டு பின்னர் தெய்வீகப் புராணமாக ஆக்கப்பட்டது என்பதே உண்மை.

மட்டுமல்ல. இராமனை தெய்வமாகக் கொண்டாடுவோர் அவர் அசைவம் சாப்பிட்டார். வேட்டையாடிய மானையும், காட்டுப் பன்றிகளையும் தின்றார் என்பது தெரியுமா?

**இராமன் அசைவமே**

இராமகாதையில் இராவணன் மாறுவேடத்தில் ஒரு முனிவர் போல வந்து சீதையிடம் 'பிச்சாந்தி' என்கிறான். சீதை அவனை முனிவராக எண்ணி 'என் கணவர் வேட்டைக்குச் சென்றிருக் கிறார். மான், காட்டுப்பன்றி இவைகளை வேட்டையாடிக் கொண்டு வருவார். உணவுண்டு செல்லலாம்' என்று சொல்வதாகக் காண்கிறோம். அப்படியானால் இராமன் சைவமா? அசைவமா? அசைவம்தானே!

# 8. முடிவு உங்கள் கையில்

**வ**ரலாற்றின் அடிப்படையில் இராமனைப் பற்றி படித்தீர்கள். இப்பொழுது இராம ஜென்ம பூமி எது? என்ற வினாவிற்கு விடை காண்பது உங்கள் கையில். இறைவன் என்பவன் தனி ஒரு நாட்டிற்கோ, இடத்திற்கோ, இனத்திற்கோ சொந்தமாக இருக்க முடியாது. அப்படி இருந்தால் அது இறையாகாது.

எல்லாரையும் படைத்த இறைவன் ஒரு நாட்டிற்கும், இடத்திற்கும் சொந்தமாக எப்படி இருக்கமுடியும்? இத்தனை வருடங்கள் இல்லாத இந்த பிரச்சினை இப்போது தேவை தானா? ஒரே சகோதரர்கள் போல் வாழ்ந்து கொண்டிருந்த இந்துக்கள், முஸ்லீம்கள் மத்தியில் இந்த பிரச்சினையை உருவாக்கியவர்கள் யார்? என்ற வினா எழும்பும்போது நம்மை சிந்திக்க வைக்கிறது.

பல வருடங்களுக்கு முன் கன்னியாகுமரியில் விவேகானந் தர் பாறையில் அவரது நினைவுச் சின்னம் எழுப்புகையிலும் இதுபோன்ற ஒரு பதட்ட நிலை உருவானதை நாம் அறிவோம். 'சதி' என்ற முறையில் வட நாட்டில் ஒரு மத கலவரத்திற்கு வித்தூன்றியவர்கள் யார்? இவர்கள் பின்னணி என்ன என்பதை நாம் சிந்திக்கவேண்டும்.

கடவுள், மதம் இவற்றின் அடிப்படையில் தான் தங்களை வளர்த்துக் கொள்ள முடியும் என்று நன்கு அறிந்து கொண்ட ஒரு கூட்டத்தாரின் கண்ணிக்கு நாம் பலியாகி கொண்டிருக்கிறோம்.

எல்லா மதத்தினரும் ஒற்றுமையாக இருப்பின் அந்தக் கூட்டத்தார் வலுவிழந்து போவர் என்பது திண்ணம். இரண்டா யிரம் ஆண்டுகளுக்கு முன் நம்மை எதன் பெயரில் அடிமையாக்கினரோ, அதையே இன்று பின்பற்றி அறிவியல் கண்ணோடு நாம் ஆராய முடியாமல் செய்து வன்முறைக்கு வித்தூன்றி நாட்டின் ஒற்றுமையை, மக்களின் சகோதரத் தன்மையை குலைத்து வருகின்றனர்.

அக்கூட்டத்தை வரலாற்றின் அடிப்படையில் நாம் கண்டு கொண்டால்தான் அவர்களது உண்மை போக்கினை உணர

முடியும். ஒரு குறுகிய நோக்கத்தோடு ஆரம்பிக்கப்பட்ட சில இயக்கங்கள் இந்திய நாட்டின் ஒற்றுமையை குலைத்து வருவதை கண்டும், அதன் பிரதிபலிப்பை உணராதவர்களாக நம்மில் பலரும், அரசியல்வாதிகளும், இருந்து வருவது நம் நாட்டின் துரதிர்ஷ்டமே. சிலர் அறிந்திருந்தும் மதத்தின் பெயரால் அடிமையாகி இருக்க, சிலர் நமக்கு ஏன் இந்த வம்பு என்று விலகி ஓட, விதி விளையாடத் தொடங்குகிறது.

அமெரிக்கா போன்ற நாடாக இருப்பின் மக்களும் தலைவர்களும் தங்கள் கருத்தை துணிந்து கூறிவிடுவர். இங்கு ஒரு அரசியல் தலைவர் தன் கருத்தைக் கூறின், அந்த சமய மக்களின் வாக்கு அவர்களுக்கு எதிராக விழும் என்ற பயம் அவர்களை பேசாமடந்தையாக்கி விடுகிறது.

சில இஸ்லாமிய நாடுகள் தங்கள் கருத்தை வெளியிட்டி ருப்பதை நமது தலைவர்களும், பத்திரிகைகளும் கண்டனம் தெரிவித்துள்ளனர். ஆனால் இஸ்ரவேல் நாட்டில் ஏற்பட்ட சண்டையின் போது உலக நாடுகள் அதை கண்ணோக்கிக் கொண்டிருக்கும்போது, இந்தியா தனது கருத்தை ஒரு சார்பாக வெளியிட்டது. அப்பொழுது இவர்கள் மௌனம் சாதித்தனர்.

உண்மையை உணர்வதிலும், உணர்த்துவதிலும் நாம் என்றும் அக்கறை காட்டுவதில்லை. இல்லாத ஒன்றை பெரிதாக்கி வன்முறையைத் தூண்டி விட்டு ஆதாயம் தேடும் கூட்டத்தார் அதனை பயன்படுத்தி நம் மக்களிடையே ஊறுவிளைவித்துக் கொண்டிருக்கின்றனர்.

சுயவிருப்பு வெறுப்பிற்கு நம்மை ஆளாக்கிக் கொள்ளாமல் அறிவியல் நோக்கோடு, சமய வரலாற்றை காண முற்படுவது அவசியம். உருவமற்ற பரம்பொருளை, மெய்ப்பொருளை நாம் காண முற்படாது மதச் சடங்காச்சாரங்களுக்கு நம்மை அடிமை யாக்கிக்கொண்டு வரும் தலைமுறையினரை வாதைக்குள் ளாக்குவது பரிதாபமானது.

தீர்க்க வேண்டிய பிரச்சினைகள் தேசத்தில் எத்தனையோ இருக்கின்றன. பணவீக்கம், வேலைஇல்லாத் திண்டாட்டம், வறுமை, விபச்சாரம், போதைப் பொருளுக்கு அடிமையாகி சீரழியும் இளைய சமுதாயத்தினர், நக்சலைட், மாவோயிச

தீவிரவாதம், மின்சார பற்றாக்குறை, பெண்களுக்கு, குழந்தை களுக்கு எதிராக நடக்கும் பாலியல் கொடுமைகள், ஆண்டு தோறும் சில வட மாநிலங்களில் பஞ்சம், வறட்சி, அதே இடங்களில் அப்புறம் வெள்ளப் பெருக்கு, பெரும் சேதம், ஆறுகள், நதிகளை இணைத்தல், ஆங்காங்கே அணைகள் கட்டினால், வறட்சி, பஞ்சம் மறையும், விவசாயம் பெருகும், வறுமை நீங்கும், மின்சார உற்பத்தி பெருகும். தேசம், தேசத்திலுள்ள அனைத்து மாநிலங்களும் தன்னிறைவை அடையும்.

கவனம் செலுத்த வேண்டிய பிரச்சினைகள், செய்து முடிக்க வேண்டிய நாட்டை வளப்படுத்தும் அபிவிருத்தித் திட்டங்கள் ஆயிரம் இருக்க, இவைகளுக்கு நமது அறிவையும், ஞானத்தை யும், நேரத்தையும், கவனத்தையும் செலுத்தாமல், நம் தேசத்தின் மதச்சார்பின்மைக்கும், ஒற்றுமைக்கும், மத நல்லிணக்கத்திற் கும், சகோதரத்துவத்திற்கும் இடையூறு விளைவிக்கும் இந்த இராமர் கோயில் பிரச்சினை தேவையா என்று நாட்டு நலனில் அக்கறை உள்ளோர் சிந்திக்க வேண்டும். மதவாத சக்திகள், வன்முறையை, தீவிரவாதத்தை, சிறுபான்மையினரை ஒழிக்கும் இந்த ஈனப் புத்தியை விட்டுவிட்டு, தேச நலனில், ஒற்றுமையில் அக்கறை காட்டுவோமா? நமது நாட்டில் கோவில்களுக்கா பஞ்சம்? இருப்பவைகளை ஒழுங்காக பராமரித்து, அந்த வழிபாட்டு ஸ்தலங்கள் மூலமாக வாழ வேண்டிய வழிகளை மக்களுக்கு போதித்தாலே போதும்.

உலக மக்கள் எல்லாரும் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகள் என்று வழிபட்டு வரும் மக்கள் மத சகதியினை ஏன் பூசிக் கொள்ளவேண்டும் என்று சிந்திக்க வேண்டும். முறையான அனுமதியின்றி கோயில்களை எந்த மதத்தினரும் கட்ட அனுமதிக்கக் கூடாது. சாலையோரத்து கோயில் காளான்கள் அழிக்கப்பட வேண்டும் என்பது எனது கருத்து. உங்கள் கருத்து சார்புடையதாக இருப்பினும், வேறுபடினும் எழுதுங்கள். நன்றியோடு ஏற்றுக் கொள்கிறேன்.

**மெய்ப்பொருள் காண்பது அறிவு. கற்பனைக் கதாபாத்திரங் களை கடவுளாக்க வேண்டாம்!**

# உதவிய நூல்கள்


1. அறவாணன், க.ப. — தமிழரின் தாயகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டி.டி.டி.ஐ. தரமணி, சென்னை - 600 113.
2. வானமாமலை, நா. — தமிழர் வரலாறும் பண்பாடும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 6/36, மவுண்ட் ரோடு, சென்னை -2
3. பெரியார் இராமசாமி, ஈ.வெ.ரா — திராவிடர் ஆரியர் உண்மை, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம், 50, ரண்டால்ஸ் ரோடு, சென்னை - 600 007.
4. எட்வர்ட் சாம் இரா. — இஸ்ரவேலரின் வரலாறு, கிறிஸ்துவ இறையியல் நூலோர் குழு, அரசரடி, மதுரை - 625 010.
5. உறையூர் வளவன் — இந்து மதம் இந்திய மதமா? அருட்செய்தி வெளியீடு, 13சி, ஆசனூர் சாலை, திருக்கோவிலூர் - 608 757
6. ஞான. இராபின்சன் — (பதிப்பாசிரியர்) திருமுறைத் தோழன், கிறிஸ்தவ இறையியல் நூலோர் குழு, அரசரடி, மதுரை - 625 010.
7. அண்ணாதுரை, சி.என். — மாஜி கடவுள்கள்
8. அரசு வெளியீடு — கலைக்களஞ்சியம் I, III, IV, V
9. கிறிஸ்தவ திருமறை
10. Flavious Josephus — Antiquities of the Jews
11. Raw — Studies of Indian History
12. Sir Charles Elliet — Hinduism and Buddism
13. Manorama year Book 78
14. S.K. Chatterji — Cultural Heritage of India
15. Jesuit Scholars — Religious Hinduism
16. Werner Reller — The Bible as History - Hodder and Stroughton, London (Translated from the German by William Necl D.D. - 1955)



## பதிப்பாசிரியர் குறித்து

துடிப்பும், வேகமும், விவேகமும், நாவன்மையும் உள்ள இவரைப் பார்த்தால் யாருமே இவருக்கு 72 வயது என்று நம்ப மாட்டார்கள். இந்திய விமானப்படையில் 26 ஆண்டுகள் இந்தியாவின் பல பகுதிகளிலும் பணியாற்றிய பின்பு, பெண்களின் முன்னேற்றத்திற்காக பாடுபடும் ஒரு தொண்டு நிறுவனத்தில் 6 ஆண்டுகள் நிர்வாக அதிகாரியாகவும், பின்னர் பென்னர் இந்தியா கம்பெனியின் டெக்ஸ்டைல் டிவிசனுக்கு பெர்சனல் மேனேஜராகவும் 6 ஆண்டுகள் பணியாற்றியவர். நாடகம், கதாகாலட்சேபம், பல்கலை நிகழ்ச்சிகள், பாட்டு, டிவி சீரியல்கள் என கலைத்துறையில் வெற்றிக் கொடி நாட்டியவர். சினிமா நடிகர் டெல்லி கணேசை முதன் முதலாக டெல்லியில் நாடக மேடையில் அறிமுகப் படுத்தியவர். பியர்லெஸ்ஸில் தன்னுடைய மார்க்கெட்டிங் திறமையால் இன்ஸ்பெக்டர் பதவி வரை உயர்ந்தவர். இப்படி சகலகலா வல்லவரான இவர் ஒரு தீவிர பக்தி வைராக்கியமுள்ள இந்துவாகவும், இயேசு எதிர்ப்பாளராகவும் இருந்தார். தேவன் இவரையும், இவர் குடும்பத்தாரையும் தெரிந்து கொண்ட விதம் மற்றும் இவரின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையில் இயேசு கிறிஸ்து செய்த எண்ணி மாளாத அற்புதங்களையும், நன்மைகளையும் சாட்சியாக பல பொதுக் கூட்டங்களிலும் 3000க்கும் மேற்பட்ட திருச்சபைகளிலும் கூறி வருகிறார். இவரின் சாட்சியும், செய்தியும், இவர் எழுதிய சாட்சி புத்தகமும் மற்ற நூல்களும் எப்பேர்ப்பட்ட கடின இருதயத்தையும் உடைப்பதாக, உயிர்ப்பிப்பதாக, அனல் மூட்டுவதாக, சபைகளை பலப்படுத்துவதாக, சபையோரை ஆத்தும ஆதாயம் செய்பவர்களாக மாற்றுகின்றது என்றால் அது மிகையல்ல. கர்த்தர் தமது நாம மகிமைக்கென்று இவரையும், இவரது குடும்பத்தாரையும் விசேஷமாக தெரிந்து கொண்டுள்ளார்.

Sundar Prints 9840199777